ஶ்ரீ



# வேங்கடவன்



# வேங்கடகிருஷ்ணன் இசைமாலை

ஆக்கியோன் :

பெ. கி. மாயக்கூத்தன்

# வேங்கடவன்
# வேங்கடகிருஷ்ணன்
# இசைமாலை

ஆக்கியோன் :

பெ. கி. மாயக்கூத்தன்

13, சாமிபிள்ளை தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை-5.

பேராசிரியர் C. ஜெகந்நாதாசார்யர்,
M.A. (History), M.A. (Tamil), L.T.P.O.L.
Dipl. Geog. Vidwan
முன்னாள் தலைமைத் தமிழ்ப் பேராசிரியர்,
விவேகானந்தர் கல்லூரி, மயிலை சென்னை-600 004.
U. G. C. பேராசிரியர்

# அணிந்துரை

தொண்டர்தம் செவியினிக்க விசைத்த விந்தத்
    தேறியநல் வைணவத்தின் வைப்பாம் நிதியைப்
பண்டைமுறை பிறழாமல் பிறங்க வைத்துப்
    பான்மையுறச் சீரியநல் லிசையிற் பெய்து
திண்ணமுடன் சுவைபலவும் துலங்கும் வண்ணம்
    தீட்டிய மாயக்கூத்தன் செய்த சேவை
எண்ணவெண்ண மகிழ்ச்சிமீதூரப் பெற்றே
    எழிற் குளந்தை தேவனருளெய்து வாரே.

பெருங்குளப் பெருமானின் பேரருளைப் பெற்று
ஒருங்குபல ராகங்களிற் பாட்டுக்கள் பாடி
மருங்குபலர் சூழவந்திக் கீர்த்தனைக ளிசைக்கக்
கருங்குரங்கு போன்றமனம் செம்மையுறு மன்றோ.

செவிக்கின்ப மாவது செங்கண்மால் நாமம்
புவிக்கணி யாவதிப் பண்ணூல்—அவிக்குமே
தொல்லைப் பழவினையை யாக்குமே செல்வத்தை
வல்லை வழங்குமே வீடு.

நாவிற்கு நல்விருந்து காதுக்குத் தேனமுதம்
பூவிற்குத் தாமரைபோல் பொற்புடைத்து—தேவிற்
சிறந்ததிரு மாலடிக்கே சூட்டியவிம் மாலை
பிறந்தபய னெய்துவிக்கு மே.

இந்த இசை நூல் திருவேங்கடம், திருவல்லிக்கேணி என்ற இரு திவ்யதேச எம்பெருமான்களின் மேல் பாடப்பட்டுள்ளது இரண்டு பாகங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. முதற்பாகத்தில் இருபத்தைந்து

கீர்த்தனைகளும், இரண்டாம் பாகத்தில் நூற்றெட்டுக் கீர்த்தனை களும் அடங்கியுள்ளன. முதற்பாகம் 25 ராகங்களைக் கொண் டுள்ளது. முதற் கீர்த்தனை கௌளையில் தொடங்குகிறது. அஃது எம்பெருமானாரைப் பற்றிய மங்களாசாசனமாகும். இறுதியிலுள்ள மூன்று கீர்த்தனைகளும் (23, 24, 25) முறையே "ரீதிகௌளை, கன்னடகௌளை, கேதார கௌளையில் பாடப்பட்டுள்ளன. இச் செயல் பாடலாசிரியரின் இசைப் புலமைக்குச் சான்றாகுமெனலாம்.

இப்பகுதியில் ஏழுமலையானின் கருணை, சப்தகிரியின் சீர்மை பாபநாச வீழ்ச்சியின் மகிமை, திருமலையானிடம் ஈடுபட்ட இசைவாணர்களின் சேவை போன்ற பல குறிப்புகள் பொதிய வைக்கப்பட்டுள்ளன. சுருட்டி ராகத்தில் அமைந்த கீர்த்தனையில் (15) துவாதச நாமங்களைத் தெரிவித்துள்ளார். கன்னட கௌளை ராகத்தில் அமைந்துள்ள கீர்த்தனையில் [24] 'அகலகில்லேன் இறை யும் என்று அலர்மேல் மங்கையுறை மார்பனை' விளித்து, வினவி மந்திர ரத்தினமாகிய த்வயத்தின் ஆழ்பொருளைச் சூசிப்பித் துள்ளார் எனலாம்.

மற்றும், எதுகை நயம், [பாட்டு 1] உவமை நயம் [20, 23] 'மலை' என்ற சொல்லைப் பதின்மூன்று முறைசொல்லித் திருமலையின் தனிச்சிறப்பைக் காட்டியிருத்தல் [10] காணலாம். தமது இயற் பெயராகிய மாயக்கூத்தன் என்பதைக் கீர்த்தனை 22-இல் பெய்துள் ளார், குலசேகர ஆழ்வாரைப் பற்றிய குறிப்பு, கீர்த்தனை 14இல் காணலாம்.

இனி, இரண்டாம் பகுதியில் திருவல்லிக்கேணியில் கோயில் கொண்டுள்ள பார்த்தசாரதியின் அநுபவத்தில் ஆழங்காற்பட்டு இப்பாடலாசிரியர் மாயக்கூத்தன் 108கீர்த்தனைகளைப்பலராகங்களில் அமைத்துப் பாடியுள்ளார். பிரபந்த காயத்ரி என்று போற்றப்படும் இராமாநுஜ நூற்றந்தாதிப் பாடற் கணக்கில் இப்பகுதியை அமைத்துள்ளார் போலும்!

முதல் கீர்த்தனை காலைப் பண்ணாகிய பூபாளத்தில்விருத்தமாகத் தொடங்குகின்றது அதனில் சுப்ரபாதம், விச்வரூபம், அர்ச்சனை கள், 'க்யூ' வரிசையில் வந்து தொழுமவர்கள் செலுத்தும் அஞ்சலி போன்ற காட்சிகளைக் குறித்துள்ளார். இறுதியிலுள்ள இரண்டு கீர்த்தனைகளையும், (107, 108) முறையே மத்யமாவதி, ஸ்ரீராகம் ஆகிய மங்களகரமான ராகங்களில் அமைத்துள்ளமை பாடலாசிரி யர் மாலடியான் மாயக்கூத்தனின் இசையறிவின் அடைவிற்குச்

சான்று பகரும் ஸ்ரீராக மங்கள கீர்த்தனையில திவ்ய தம்பதிகளைச் சேரவைத்துள்ளது போல எம்பெருமானாரோடு மணவாளமாமுனிகளையும் சேர வைத்து அனைவர்க்கும் மங்களம் பாடியிருப்பது பெரிதும் போற்றத் தக்கது.

இனி, இப்பகுதியில் கவனிக்கத்தக்க சில முக்கிய விஷயங்களைக் குறிப்பிடுகின்றேன்.

**கீர்த்தனைகளின் எண்கள் :**

1 **கீர்த்தனை 7**—இது பரவசநிலை யெய்தி பாடிய பாட்டு, (இதனில்'அடா' என்று பரம்பொருளை விளித்திருப்பது அடாது; சம்ப்ரதாய வழக்குக்கு முரணாகும்).

2 **கீர்த்தனை 10**— நடைச் சந்தப்பாட்டு. இதனில் 'தெய்வம்' என்ற சொல்லைப் பயிலவைத்திருப்பதைக் காண்க.

3. **கீர்த்தனை 24**—நவராக மாலிகை:கல்யாணியில் தொடக்கம் பின் சரணங்கள் அடாணா ஆனந்த'பைரவி, காம்போதி,'ஷண்முக ப்ரியா, சிந்துபைரவி, நாட்டைக் குறிஞ்சி, ஆரபி, மோஹனம், ஹம்ஸாநந்தி என்ற இராகங்கள்.

4 **கீர்த்தனைகள் 50 முதல் 56**—இந்த ஏழு கீர்த்தனைகளில் அவதாரங்களின் மகிமைக் குறிப்புகள் காணலாம்.

5. **கீர்த்தனை 57**—நவராகங்களில் நாமங்களைச் சூசிப்பிக்கும். வகையில் சொற்களைப் பிரயோகித்துப் பிரார்த்தித்தல். குறிப்பு இதனில்பொதிய வைத்துள்ள சொற்சித்திரம் சுவைக்கத் தக்கது.

6. **கீர்த்தனைகள் 70 முதல் 74**—இந்த 5 கீர்த்தனைகள் தோடி ராகத்தில் தொடர்ச்சியாக வந்துள்ளன.

7. **கீர்த்தனை 81**—பவனி வருதல்.

8. **கீர்த்தனை 88**—பள்ளு மெட்டு. (மெட்டு-Tune) இதனில் 7ஆவது கண்ணியில் — அல்லிக்கேணி மாடவீதிகளில் வாழ்கின்ற தொண்டர்களின் அடிப்பொடியாய் இருக்க வரம் வேண்டுவதை நோக்குங்கால் பாடலாசிரியர் மாயக்கூத்தனின் பக்திப் பெருக்கை என்னென்பது!

9 கீர்த்தனை 90—சேர்த்தி அறை சேறல்; பள்ளியறை மேவல்

10 கீர்த்தனை 91— கட்டியங்கள் கூறுதல். கட்டியமாவது—பெருமானைக் குறித்துச் சொல்லும் புகழ்த்தொடர்.

11. கீர்த்தனை 95-கிள்ளை விடு தூது—ராகமாலிகை, சாரங்கா, ரஞ்சனி, சாமா, பூபாளம் என்ற நான்கு ராகங்கள்.

12. கீர்த்தனை 99—தெருவினில் உலா வருதல். ராகமாலிகை, அடாணா, தன்யாசி, ஹிந்தோளம், சுருட்டி என்ற நான்கு ராகங்கள.

கீர்த்தனை 101—ஓடப்பாட்டு. (குறிப்பு—ஐலசா ஐலசா என்பது அப்பாட்டுக்கேற்ற ஒலிக்குறிப்பு.)

கீர்த்தனை 104—பறவைகளைத் தூது செல்ல விடுதல்.

(குறிப்பு :—இங்குத் திருவல்லிக்கேணி பெருமானை "இடையன்" என்றது. திரிமூர்த்திகளில் இடையில்வைத்துப்பேசப்படும்ரக்ஷகன் என்பது தொனி. ("எங்கிருந்தோ வந்தான் இடைச்சாதி நான் என்றான். —பாரதியார்)

கீர்த்தனை 105—நலங்கு பாட்டு (குறிப்பு : நலங்கிட்ட பின்னர் மங்களம் பாடுவது மரபு) அதன்படி.

கீர்த்தனை 108—மங்களம். இதனில் ருக்மிணி சமேதனான பார்த்தசாரதிக்கும், எம்பெருமானாருக்கும், பெரியஜீயருக்கும் ஒருங்கே மங்களம் சொல்லப்பட்டுள்ளது.

மற்றும் இனி கீர்த்தனை எண்கள் 11, 26, 80, 90 இவைகளில் முறையே காலைச்சந்தி பூஜை உச்சிக்காலபூஜை, சாயரட்சை பூஜை, அர்த்த ஜாம பூஜை குறிக்கப்பட்டுள்ளன.

கீர்த்தனை 13—மாடவீதிகளில் எழுந்தருளும் அழகு குறிக்கப் பட்டுள்ளது.

கீர்த்தனைகள் 24, 59—இவைகளில் சித்திரை பிரம்மோற்சவம் பற்றிய குறிப்புக்கள் காணலாம்.

கீர்த்தனை 15—இது ஊஞ்சல் பாட்டு சூசிப்பது; எதுகுல காம்போதி ராகத்தில் பாடியது; இது A I Rஇல் பாடப்பட்டது.

மற்றும் கீர்த்தனை 103—ஊஞ்சல் பாட்டு: இதனை லாலி பாடுதல் என்பர் ஊஞ்சலையாட்டும் பொழுது பாடப்பெறும் பாட்டு.

கீர்த்தனைகள் 19, 23, 84—இவைகளில் பகவத்கீதையின் பெருமை குறிக்கப்பட்டுள்ளது. [19இல் 'நெறிமுறைவகை உண்டு' என்றதில் கர்ம, ஞான, பக்தி, ப்ரபத்தி உபாயங்கள் குறிக்கப் பட்டன; 23இல்' நலிந்துழலும் உயிர்கட்கு நலம்பலவே செய்ய வகுத்த பாதை பகவத்கீதை' என்னப்பட்டது.

84இல் கர்மண்யேவ அதிகாரஸ்தே,

"மா பலேஷு கதாசன" என்பது குறிக்கப்பட்டுள்ளது.

கீர்த்தனை 25—பதம் என்னும் இசைப்பாட்டு வகையில் பாடப் பட்டது.

கீர்த்தனை 64—பார்த்தன் தேர்முன் நின்ற பரமன் முகத்தில தழும்புகளைக் கண்டு இரங்கியது.

இது நிற்க : இனி தன்யாசி கீர்த்தனை 61இல் பார்த்தசாரதியை "ருக்மிணி கேள்வா" என விளித்துப் பின் 'கேள்...வா' எனப் பிரித்து முறையிடு சமர்ப்பித்தமை பதசாரத்திற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

கீர்த்தனைகள் 19, 26, 38, 40, 54, 60 97, 106— உவமை நயம் கொண்டவை.

கீர்த்தனைகள் 43, 60 இல்—எதுகை அழகு காண்க.

கீர்த்தனை 86 — நடன ஒலிக்குறிப்பு காணலாம்.

கீர்த்தனைகள் 2, 91 இல்— அடுக்குத் தொடர் காணலாம்.

கீர்த்தனை 10 — "தெய்வம்" என்ற சொல்லைப் பதினேழு முறையும்,

கீர்த்தனை 36 — "கோலம்" என்ற சொல்லை ஆறு முறையும் உபயோகப்படுத்திய அழகைக் காணலாம்,

ஆழ்வார்கள் சிலரைப் பற்றிய குறிப்புகளைப் பின்வரும் கீர்த்தனைகளில் காணலாம்.

கீர்த்தனை 5 — திருமங்கையாழ்வார், பேயாழ்வார்

கீர்த்தனை 12 — நம்மாழ்வாரின் திருவாசிரியம்

கீர்த்தனை 86 நம்மாழ்வார், ஆண்டாள், திருமழிசைப்பிரான், தொண்டரடிப்பொடியாழ்வார்,

கீர்த்தனை 97 பெரியாழ்வார்

கீர்த்தனை 27இல்—இந்தப் பாடலாசிரியர் தமது இயற்பெயரை 'மாயனே' என்ற விளியில் குறிப்பாக வெளியிடுகிறார்.

இது நிற்க,

மற்றும் பேச்சு வழக்குச் சொற்களும், கொச்சைச் சொற்களும் ஆங்காங்கே பயில வைத்துள்ளமையும் காணலாம்.

இறுதியாக, பாகேஸ்வரி (34), ரதிபதிப்ரியா (41), ஜோன்புரி (76) போன்ற அபூர்வ ராகங்களில் கீர்த்தனைகள் அமைத்துள்ளவையும் குறிக்கொள்ளத்தக்கது. இந்த இசைப் பாட்டுக்களை நாத்தழும்பெழப்பாடி குலசேகரர் கூறியது போல் மெய்தழும்பத் தொழுதேத்தி இன்புறுவோமாக.

இந்நூற்பதிப்பில், எழுத்துப் பிழைகள், சொற்பிழைகள், பல மலிந்து காணப்படுகின்றன. அவைகளைப் பொறை மேற்கொண்டு திருத்திப் படித்துக் கொள்ளவும்.

> "குற்றம் களைநது குணங்கொண்டு வாசித்தல்
> கற்றறிந்த மாந்தர் கடன்"

17, வேங்கடாசல செட்டி தெரு, இங்ஙனம்,
திருவல்லிக்கேணி, **C. ஜெகந்நாதாசாரியர்**
சென்னை-5.
3-11-96

ஸ்ரீமத் ஸுந்தர ஜாமாத்ரு முநிமாநஸ வாஸிநே |
ஸர்வ லோக நிவாஸாய ஸ்ரீநிவாஸாய மங்களம் ||

ப்ருந்தாரண்ய நிவாஸாய பலராமாநுஜாயச |
ருக்மிணி ப்ராணநாதாய பார்த்தஸூதாய மங்களம் ||





திருக்குளந்தை ஸ்வாமி ஸ்ரீ மாயக்கூத்தன்

# நன்றி நவிலல்.

பெருமையுறப் பெயர் சொல்லி அழைத்தாலும் பிழையெனவே கருதுகிறேன் பேராளா! ஒரு அருமைக்காய் அழைக்கின்றேன் அருள்புரிக! ஜெகந்நாதாசாரியரே! வைணவத்தின் மாண்பே! வண்டமிழின் சீர்ரே! வளர் கலையின் நீர்மையே! என் வாய்ப்பே! பெயர் தெரியா எளியேனைப் பெருமைக்கு இட்டுச் சென்ற உம் தகைமைக்குக் கைம்மாறு செய்யும் சக்தி இல்லை; பொறையருள்க!

பேரன்பின் பிறப்பிடமாய்ப் பெருமைமிகு நட்பாய் நண்ணிவந்த போழ்தெல்லாம் நலம் செய்து இன் அருளாய் உடனிருந்து உதவிய ஸ்ரீமான் ஒழையூர் ரங்கசாமி அய்யங்கார் ஸ்வாமி பெருந்தகைக்கும், திருமலை தேவஸ்தான உதவிக்கு உதவிய இன்னருளாளர் ஸ்ரீமந் மணவாள ஐயங்கார் ஸ்வாமி அவர்களுக்கும், வரதராஜன், ரெங்கராஜன் போன்ற சம்பிரதாயச் சாரபாளருக்கும் இவ் இசைமாலையின் வெளியீட்டு விழாவுக்கு வந்து சிறப்பித்த ஸ்ரீவைஷ்ணவ செயமல் வேங்கட கிருஷ்ணன் அவர்கட்கும், தாஸஸ்ய திலகம் ஸ்ரீமான் குமாரவாடி இராமானுஜாசாரியர் ஸ்வாமிகட்கும்! மற்றும் எளியேன்பால் இன்னருள் செய்து இம்மாலையின் மணம் இடையீடின்றி எங்கணும் பரவ முனைந்த திருவல்லிக்கேணி பெரியவர்கட்கும் தெண்டன் சமர்ப்பித்து நன்றி கூறுகிறேன்.

இன்னும் திருமலை தேவஸ்தான புத்தக வெளியீட்டு கமிட்டியார்' அதன் எடிட்டர் ராமமூர்த்திக்கும் நன்றியும் வணக்கமும் நவிலுகிறேன்.

குறிப்பாக, அன்புடன் அடியேனின் நிலைக்கு உட்பட அச்சிட்டு இம் மாமலர் விகசிக்கக் காரணமான குரு அச்சகத்தாருக்கு என்றும் கடப்பாடுடையேன்

எல்லாவற்றிற்கும் மேலாக, இம்மாலையின் வெளியீட்டு விழாவிற்கு இடம் தந்து உதவிய திருவல்லிக்கேணி ஸ்ரீருக்மிணி சமேத பார்த்தசாரதி ஸ்வாமி கோயிலாருக்கும் மிகவும் நன்றி கூறுகிறேன். வணக்கம்.

அன்பன்

**பெ. கி. மாயக்கூத்தன்**

# எளியேனைப் பற்றியது

காலில்லான் தத்தித்தத்தி தீர்த்தக்
கரை கண்டு தொழுதாற் போல
நூலில்லான் தொத்தித்தொத்தி நுவன்ற
இசை மாலை காண்பீர்

பாலில்லாக் குழவிபோலப் பார்க்கப்
பரிதாபம் தோன்று
கூடிழுண்ட குழந்தை போலக்
கொஞ்சம் கோணல்மாணலாய்க் காணும்

குணங்காணும் 'குணமொன்றே தான்
புலமை கொண்டவர்தம்' குணமாம் என்பர்
இனம் இனத்தைக் காப்பதே போல்
என்னையும் காத்து உவப்பீர்

மனம் மகிழ்தார் மலரதாச்சு
மாலவன் இணையடிக்கே சூட்டி விட்டேன்
சினம் தவிர்க குறையிருந்தால்;
சிரம் தாழ்த்தி வணங்குகின்றேன்!



# இதில் பாட்டும் பண்ணும் அடியேனுடையது

தாளம், என் அம்மான் சேய் நெல்லை மிருதங்க வித்வான்கிருஷ்ண மூர்த்தியின் கைவண்ணம்.

எல்லாமே ஆதிதாளத்தில் அமைந்த பாட்டுத்தானோ என்னும்படி அமைத்ததன் காரணம் அடியேனின் ஞானமின்மையே!

யான் எழுதியதை அருள் கூர்ந்து அத்தனை பாடல் களையும் பார்த்து, சிறு சிறு பிழைகளைத் திருத்தியும் கொடுத்துப் பாராட்டியும் சொன்னது— தமிழ் பெருந்தகை யாளர் விவேகாநந்தர் கல்லூரி முன்னாள் தலைமைத் தமிழ்ப் பேராசிரியர் ஸ்ரீமான் ஜகந்நாதாசாரியர் அவர்களின் இயல்பும் கருணையும் ஆகும் தமிழின் பாற் தாங்கொணாக் காதல் கொண்டோருக்குக் கை வந்த கலையாம் அப்பணி! நன்றி கூறி நழுவ விரும்பவில்லை. நன்றாகத் தமிழ் எழுதுவேன் என்று சொல்வது அவர்க்குச் சூட்டும் காணிக்கை எனக் கருதுபவர் அப்பேராளர். வாழ்த்த வயதில்லை மலரடி பற்றுகிறேன்.

நீங்கள் என்ன சொல்வீர்களோ என்ற கவலை இருந்தாலும் கூட, நன்றாகச் செய்துள்ளோம் என்ற நம்பிக் கையும் இருக்கிறது.

உங்களுக்குத் தெரியாதா நான் [புதியவன் என்று.

சுவையையும் பொருளையும் நீங்கள் எடுத்துக் கொண்டு பிழையை என்னிடம் தாருங்கள்

திருத்தப் பார்க்கிறேன்—திருந்துகிறேன்.

வாய்ப்பினை மட்டும் மறுக்காதீர்கள், நினைவு இருக்கட்டும். வேண்டுகிறேன். வணக்கம்!

அன்பன்

பெ. கி. மாயக்கூத்தன்



ஸ்ரீ பத்மாவதி தாயார் சமேத திருவேங்கடவன்

# திருப்பதியைப் பற்றிய பாட்டு

**கௌளை ராகம்**

**பல்லவி**

ஸ்ரீ இராமானுஜா உமக்கு நமஸ்காரம் உம்மை
நம்பி வந்தேன் இப்போ என்னைக் காரும் (இரா)

**அனுபல்லவி**

பத்மாவதியின் பதியைப் பாட உம்மைப்
பணிந்து நின்றேன் நல் அருள் தாரும் வாரும் (இரா)

**சரணம்**

திருவேங்கடத்தின் சீரெல்லாம் என் சிந்தையிலே
தெரியும் வரம் தாரும்
அருமா நிதியாம் அவன் புகழ்பாட அன்புடன்
எந்தன்கூட இரும்
குரு மாநிதியே எதிராசா குருகூரான் போல் தமிழ்பாட
வருமா நானும் முயலுகிறேன், வாழ்த்துதி வாழ்த்துதி
வாழ்த்துதியே! (இரா)

**பாட்டு—1**

பொன் வரையில் வாழுகின்ற பூமானின் தேவி
நற்றமாய் என் நெஞ்சில் நடம் ஆடுகின்றாள்
எல்லே இளங்கிளியே இன்னமுதே தோழி
**குறிஞ்சி**யிலே பண்ணிசைத்து அந்தக் கோலமதைக் கூறு

கட்டழகு வட்ட முகம் பொட்டழகில் கூட
விட்டழகாய் ஓடி வந்து விளையாடும் **குறிஞ்சி**
மொட்டவிழும் போழ்து எழும் அழகுமுழுவதுமாய்
கிட்டி வரும் கோலம் அவள் கொஞ்சும் திருக்கோலம்

**ஆநந்த பைரவி**யின் அழகான அண்ணன்
அன்னவனை ஆளுகின்ற அருளான தேவி
விண்ணில் எழும் நிலவாக விளங்குகின்ற காட்சி
காண நாம் என் செய்தோம் கற்பகமே பாடு

சார் அங்க அணிமணிகள் தகத்தகானச் ஜொலிக்க
சாமந்தி கஸ்தூரி செண்பகமும் குலவ
போம் அந்திப் பொழு தொளிரும் பொன்வானச் செம்மை
பூண்டவனை வேண்டி நிதம் பூவையே பாடு

நெஞ்சம் விரித்த நம் நினைவை எல்லாம் சுருட்டி
பங்கயக் கண்ணனையும் பத்மாவதி தேவியையும்
கொஞ்சும் தமிழ்பாடி கொண்டாடி தொழுதக்கால்
விஞ்சுபுகழ் மேன்மை செல்வம் வெற்றி உனதாகும் அம்மா

பாட்டு—2 செஞ்சுருட்டி ராகம்

பல்லவி

பாரில் உயர்ந்தமலை ஏழுமலையே அதைப்
பார்த்தவர்க்கு பிறிதொரு துயர் இல்லையே (பாரில்)

அனுபல்லவி

பேராயிம் கொண்ட பெருமானின் கருணை
ஓரோரு ஆயிரமாய் உகந்த திகழ்வன்றோ! (பாரில்)

சரணம்

சீர்மிகும் அடியவர்தம் சிந்தையோ ஏழுமலை
ஊரூர் மக்களெல்லாம் உணர்வதும் ஏழுமலை
பார் எங்கு பார்த்தாலும் கண்ணில் படுவது ஏழுமலை
ஆர்வமிக அனைவரும் அழைப்பதும் ஏழுமலையே! [பாரில்]

பாட்டு—3 தேவகாந்தாரி ராகம்

பல்லவி

வேங்கட வாணா உன் விழிமலர் வீச்சிலே
வீழ்ந்தேன் அயர்ந்தேன் இனி விடுதலை
இல்லையப்பா. [வேங்கட]

### அனுபல்லவி

ஓங்கும் உன் புகழால் என் உயிர் உடல் செயல் எல்லாம்
பாங்குடன் பயன் பெற்று பிறர் பயனுக்கு
ஆக வேணும் [வேங்கட]

### சரணம்

தாங்கரும் கலை கல்வி சாத்திரம் ஞானமெல்லாம்
தீங்கின்றி என் தேசம் தினம் தினம் பெற்று உயர
ஏங்குது என் மனம் இறைவா அருள்புரிவாய்
கோவிந்தா கோவிந்தா என்றுன் கோவிலில்
தவம் கிடப்பேன் [வேங்கட]

## பாட்டு—4 யமுனா கல்யாணி ராகம்

### பல்லவி

வாசா ஸ்ரீனிவாசா அன்பர் மனத்துள்ளோ கமழும்
மாமலர் வாசா [வாசா]

### அனுபல்லவி

தாஸாதி தாஸர்களின் தலைவாசா உன்னைக்
கூசாமல் அழைப்போரை கூடிடும் நேசா [வாசா]

### சரணம்

பாசம் என் தேசம் எல்லாம் பங்கயச் செங்கண் ஐயா
ஆசை எது எனிலோ அகன்ற திருமார்பு
தேசம் என் சுற்றம் எல்லாம் திருக்கர அபயம் தானே
வீசும் உன் ஒளி என்னை மெல்லவே கொண்டணைத்தையா [வாசா]

## பாட்டு—5 சாமா இராகம்

### பல்லவி

கேட்டது கிடைக்கும் என்று ஓடி வந்தேன், உடன்
தமிழ் பாட்டையும் பரிசாகப் பாடிவந்தேன்—ஐயா [கேட்]

ஆட்ட பாட்ட ஆர்பாட்ட வாழ்வினிலே என்
நாட்டம் குறைந்தது ஐயா நண்ணி வந்தேன் உன்னை [கேட்]

சரணம்

ஆழ்வார்கள் பாட்டு அன்னமாச்சாரி கிருதி
ஐயாறுப்புலவன் இசை ஆளுகையை எனக்கும்
வாழும் வரை தருவாய் மாமலை ஸ்ரீனிவாசா தமிழ்த்
தேனில் குழைத்து அதைத் தினமும் நான் தருவேன் [கேட்]

பாட்டு—6 யதுகுல காம்போதி ராகம்

பல்லவி

கோலாகலங்கள் கூடி கொலுவிருக்கும் மலை
கும்பிட்ட பேரையெல்லாம் குலவி உயரும் மலை [கோல]

தோலா வழக்கன் போல அன்பைச் சுரந்து அடியவரை
சோரம் செய்தே நாளும் பாலாஜி ஜொலிக்கும் ஏழுமலை
[கோலா]

சரணம்

கால காலமாய் கனிவில் திரண்டமலை
கருதி வரும் நமது கணக்கில் படர்ந்த மலை
பாலாகத் தேனாக பஜிப் பேருக்கு நினைவாக
பரிவாகத் தெளிவாக பக்தர் தம் தாயாக [கோலா]

பாட்டு—7 அடாணா ராகம்

பல்லவி

திருவேங்கட மாமலைக்கு வாருங்கள் உங்கள்
வேதனை மாறுவதை உணருங்கள் [திரு]

### அனுபல்லவி

யாரவன் புவி மூலம் அவன் எனைக் காக்கட்டும் என்ற
யானைக்கு அருள் புரிந்த ஐயன் மெய்யன் வாழும் [திரு]

### சரணம்

பசுமை பசுமை அம்மா ஏழுமலையெல்லாம் பசுமை, அது
நசையறு மனங் கொண்டோர் நாடிடும் எழிற் கோட்டை
திசையுடன் தேவர்களும் தினம் தொழும் கலின் காட்டை
இசையுடன் பாடியாடி இறைஞ்சிடுவோம் வாரீர் [திரு]

பாட்டு—8 அசாவேரி ராகம்

### பல்லவி

சரணம் சரணம் சரணம் சதுபுஜா இன்னும் சரணம்
கருணையைக் கண்களாக்கி காத்திடும் தேவா சரணம் [சர]

### அனுபல்லவி

வேங்கடவாணனே! விமலனே கமலனே
வேந்தனே உனதரும் விரிமலர் தாள் சரணம் [சர]

### சரணம்

அண்டங்களை எல்லாம் அசையும் விழி ஆளும்
தொண்டர் சொல்லியே தொழுவார் உனை நாளும்
கொண்டல் போல் வண்ண கோவிந்தா சரணம் சரணம்
விண்டுரைக்க மாட்டாத விந்தையே சரணம் ஐயா! [சர]

பாட்டு—9 கமாஸ் ராகம்

### பல்லவி

ஆழிசூழும் புவி அனைத்தை ஓர் குடைக்கீழ் ஆளுகின்ற
மன்னரைப் போல்
வாழ்பவனே! எங்கும் சூழ்பவனே! அன்புக்கு தாழ்பவனே!
மாதவனே! ஆழி

### அனுபல்லவி

சாப நாசம் செய்யும் பாபநாசத்தின் பக்கமிருந்து அன்பர்தம்
சோகத்தை நாசம் செய்பவனே, தூயவனே உமை
சோதரனே சாதகனே ஆழி

### சரணம்

ஏழுமலை அடுக்கோ மறை ஏடுகளின்
அடுக்கோ என் ஈசாஇது என
இருகரம் கூப்பி நாளும் தொழும்
பக்தர் நலிவகற்றும் பெருமானே
வந்தனைகள் செய்து நின்றேன்
வாழ்த்தி அருளுவையே! [ஆழி]

பாட்டு—10 — காபிராகம்

### பல்லவி

திருமலை ஒரு மலை ஜீவமலை தினம்
கணம் உயர்ந்திடும் திருவேங்கட மாமலை [திரு]

### அனுபல்லவி

அன்பே உயர்வாகி அருளே பரப்பாகி
பரிவே பசுமையாய் படர்ந்தமலை [திரு]

### சரணம்

ஏழுமலை அன்பர் ஏறும் மலை அவருக்கு
ஏற்றமலை நெஞ்சில் ஏற்றும் மலை
ஆளும்மலை அவரை ஆளுமலை வேறு
ஏதுமலை இது போல் இன்பமலை [திரு]

பாட்டு—11 — ஸ்ரீரஞ்சனி ராகம்

### பல்லவி

ரஞ்சித ரட்சக சப்தகிரி பல
ரஞ்சிதர் வாழும் சொர்ணகிரி [ரஞ்]

### அனுபல்லவி

வேத விலாஸ விலக்ஷ்க்ஷண புரி
மாதவர் யாதவர் வாழும் புரி [ரஞ்]

### சரணம்

நாத கீத சுக நடுவினிலே ஸ்ரீ
நாயகன் நிற்கும் எழிற் கோலத்திலே
பேதவாதமின்றி பெரும் திருக்கூட்டம்
கோஷம் போடுது கேள் கோவிந்தா கோவிந்தா என்று [ரஞ்]

## பாட்டு—12 குறிஞ்சி ராகம்

### பல்லவி

சாத்திரமும் சரித்திரமும் சூத்திரமும் கற்ற
கோத்திரத்தார் குடி வாகும கோல மாமலையே [சாத்]

### அனுபல்லவி

மாத்திறத்தால் ஐயன் புகழ் பாடி நலம் தேடி
பயன் பெறுவார் பின்னும் நலம் பெறுவார் அவரே [சாத]

### சரணம்

நாத் திறமே வரய்ந்த பல நல்லோர்கள் கூடி
நாளும் தொழுதிருப்பார் நாரணனை நாடி
ஆத்திரமே கொண்டறியார் அங்கிருப்பார் அன்பாள்வார்
வாய்த்த திரு மந்திரமாம் அந்த மறையவர்கள் சொல் [சாத்]

## பாட்டு—13 காம வர்த்தினி ராகம்

### பல்லவி

ஏழுமலையானைத் தொழுதிருப்பீர் பல
ஏற்றமெல்லாம் பெற்று வாழ்ந்திருப்பீர் நம் [ஏழு]

### அனுபல்லவி

வாழும் வரை அவன் வசமாவீர் ஆனல்
சூழும் ஐயா புகழ் தொடருமைய்யா செல்வம் [ஏழு]

### சரணம்

வீழும் பகை எல்லாம் வெற்றியோ உமதாகும்
தாழ்வு தந்திடும் தரித்திரம் பிணி மூப்பு
பாழும் குழி தேடி பாய்ந்தே ஓடிடும்
சீரும் சிறப்பும் பிற செம்மையும் நீராவீர் [ஏழு]

## பாட்டு—14 லதாங்கி ராகம்

### பல்லவி

இனி ஒரு வரம் தாரும் ஏழுமலையானே
இனி ஒரு வரம் தாரும்

### அநுபல்லவி

எனக்கொரு வரந்தாரும் ஹே ஸ்ரீனிவாசா
இனி வரும் பிறவிகளை ஏழுமலையில் கொள்ள [இனி]

### சரணம்

மரமோ செடி கொடியோ மலரோ திருத்துழாயோ
தரம் எதுவானாலும் தந்திடும் திருவடியில
பரம் பொருளே உன்னை பணிவாகத் துதிக்கின்றேன்
வரமது எனதாக மனது வையும் தேவா [இனி]

## பாட்டு—15 சுருட்டி ராகம்

### பல்லவி

கேசவ நாராயணா பிறவிக் கேடதைப் போக்கிடுவாய்
மாதவா கோவிந்தா மாமலை ஸ்ரீநிவாசா [கேச]

### அநுபல்லவி

விஷ்ணுவே மதுசூதா வேண்டியுனை பின் தொடர்வேன்
திரிவிக்ரம வாமனன் ஆகி தரிசனம் தருவீரே [கேச]

### சரணம்

ஸ்ரீதர இருடிகேசா தினமும் உன் வாசல் வந்து
பத்மநாபா தாமோதரா எனைப்பாருமென்று கூவி நிற்பேன்
அப்போழ்து அடியவர்கள் யாரிவனைப் பாரும் என்பர்
தப்பாமல் நீயும் என்னை தாளிணையில் சேர்ப்பாயே [கேச]

பாட்டு 16 ஆரபி ராகம்

பல்லவி

திருப்பதி எமபெருமான் தருவான் பெருவாழ்வு
ஏன் மயங்குகின்றாய் மனமே!

அனுபல்லவி

நானறிவேன் அவனை நல்லவர்களும் சொன்னார்
மனைழில் திரௌபதி மானத்தை காத்தவனை [திருப்பதி

சரணம்

கோணாமல் கொண்டுவா உள்கோல நினைவுகளை
கொட்டிடு அவன் திருப்பாதத்திலே அவனைப்
பேணிய முறை சொல்லு பெரியோரின் வழி நின்று
வாழையடி வாழையாய் உம்மை வணங்குகின்ற குலம்நான்
என்று [திருப்பதி

பாட்டு 17 சக்கரவாகம் ராகம்

பல்லவி

உண்மை சொன்னேன் ஐயா எனக்கு உம் சேவடித்
துணையல்லாள் சிறிதும் கதி இல்லை என்ற [உண்மை

அனுபல்லவி

தண்மை பொழியும் விழிசதுர்மறை உரைத்த செவ்வாய்!
திண்மையுறத் திருமலையில தேடினால் கிடைக்கும் என்றார்
அந்த [உண்மை

சரணம்

தண்மெணழில் தழுவி எங்கும் தவழும் எழில் ஒளி உமிழ்ந்து
கண்சிமிட்டும் போழ்திலொரு காட்சியாய் விரிவதுபோல்
வண்ணமுற நீ நிற்கும் மாட்சியிலாழ்ந்து எந்தன்
சிந்தையைப் பறி கொடுத்தேன் சீர்பாடி நிற்கின்றேன் அந்த
[உண்மை

பாட்டு 18 கல்யாணி

## பல்லவி

கார்முகில் பரவும் வேங்கடத்தே, அந்த
சீர் மகள் புரளும் திருமார்பன்
பேர் சொல்லி வருகின்ற யாவரையும்
பேணும் விதம் ஒன்று நான் அறிந்தேன் [கார்

## அனுபல்லவி

யாராம் ஏதூர் என்பதெல்லாம் அவன்
பேரேட்டுக் கணக்குக்கு வருவதில்லை
சீர்மலிந்த குடி அடியார் தேவரொடும் இணைபவரை
கண்டஉடன் காக்கும் கணக்கொன்று இருக்குதைய்யா [கார்

## சரணம்

ஆருயிர் அனைத்தையும் அவனாக எண்ணவும்
நேரும் நிகழ்வுகளை அவன் நினைவோடு பார்க்கவும்
தேரும் நிலை நமக்கு தெரிந்து விட்டால் போதும்
ஆளும் அவன் கருணை அப்போழ்தே நமைச்சூழ்ந்து [கார்

பாட்டு 19 நீலாம்புரி ராகம்

## பல்லவி

யார் யாரோ உனை அழைத்து ஆராரோ சொன்னதுண்டு
யார் அவராய் இருந்தாலும் அடிபணிந்து வணங்குகிறேன்
[யார்

சூதாட வந்தொருவர் தோற்றோடிப் போன கதை
தீதாக இருந்தாலும் உன் திறம் ஆய்ந்தார், மகிழுகிறேன்
[யார்

## சரணம்

எதிராக எதிர்இருந்து சதிராகக் காயுருட்டி
சாடி ஆடி வென்றதிலே ஓர் தத்துவத்தைப் படைத்தாயே!
நாங்கடவா வேங்கடவா எந்த நாளும் உனைத்
தொழுதிருப்பேன்
பாங்குறவே பார்க்கின்ற பாக்கியத்தை சீக்கிரம் செய் [யார்

பாட்டு 20 — கானடா ராகம்

### பல்லவி

புகழோ இகழ்வோ எனை என் செய்யும் வேங்கடவன்
புகழ்பாடித் திரிகின்ற பேறு பெற்ற என்னை இனி [புகழ்

திகழ்வோ மகிழ்வோ தீங்கனிப் பிழிவோ என்றிருக்கும்
சோதிப் பிழம்பைச் சுற்றி தொழுது நிற்கும் எனை [புகழ்

### சரணம்

எழுதி வடித்து அவனை ஏற்றியோர் பலருண்டு
அழுது வழிந்து அரற்றி அடைந்தவர்களுண்டு குலங்
கெழு மறையாளர் கும்பிடும் வேங்கடத்தில்
இழிந்திடும் அருவிபோல் இருந்திடும் அடியேனை [புகழ்

பாட்டு 21 — செஞ்சுருட்டி இராகம்

### பல்லவி

மாது தவழ் மார்பன் எனைப் பாரானோ அணிந்த
மணித்திரளின் நேர்த்தியெனக் கூடானோ [மாது

### அனுபல்லவி

பேதமற்ற மாதவர்கள் பேணுந் திருவேங்கடத்தின்
தாது என் சாரமெனத் தாரானோ திருவடியை [மாது

### சரணம்

வாதேதும் நானறியேன் அவனை வணங்குவது அல்லாமல்
நீதெதுவும் தெரியாது, தெரிந்ததுவோ திருநாமம்
சூதெதுவும் அறியானைச் சூழ்ந்ததுவோ தொல்லையப்பா
தூதுசென்ற பெருந்தோளா தோன்றுயோ நான் காண [மாது

பாட்டு 22 காம்போதி இராகம்

பல்லவி

மாலாகினேன் ஸ்வாமி உம்
மலையில் வளர்கலையும் மக்கள் நலமும் கண்டு [மாலா

அனுபல்லவி

பூலோக வைகுந்தமோ ! அமுதைப் பொழியும் கற்பகக்காவோ
கால பயமகற்றும் உன் கருணையே மலையாகக்கண்டு [மாலா

சரணம்

ஸ்ரீனிவாசா அன்பர் சிந்தைமகிழ் நேசா
திருமலை தன்னில் ஒரு ஜீவனாய் நானும் வாழ
உண்டியல் போடணுமா ஒரு சலுகை கிடையாதா
என்ன நான் செய்வேன் ஐயா என் ஆசையை
நிறைவேற்றும்! [மாலா

தளர்ந்தேன் அந்நினைவாலே தாளேன் இனி ஒருபோழ்து
வளரும் மதி தவழும் மலையின் பேரரசே
மலையில் ஒரு இடம் இந்த மாயனுக்கு தந்தால்
மாறன் தமிழ் பாடி மகிழ்வில் திகழவைப்பேன் [மாலா

பாட்டு 23 ரீதி கௌளை ராகம்

பல்லவி

கடல் வீழ்ந்த மழை போல கனவுகள் போனாலும்
என் நினைவுகள் உருப் பெற்று வாழாதா! [கடல்

அனுபல்லவி

வேங்கட வெற்பைச் சுற்றி விளையாட நினைத்த என்னை
வீணன் எவனோ வீழ்த்தி வென்றானே [கடல்

சரணம்

பண்டு செய்த தவம் ஏதோ பலித்தது போல உனக்கு
தொண்டு செய்யும் பாக்கியம் தொடர்ந்தது மகிழ்ந்தேன்
கண்டு அதனைப் பொறுக்காமல் காலம் சதி செய்ததப்பா
என்றினி நான் பெறுவேன் அந்த ஏற்றத்தைக் கண்குளிர
[கடல்

பாட்டு 24 கன்னட கௌளை ராகம்

பல்லவி

காரெழில் வண்ணா என்ன காரியம் நீ செய்தாய்!
பூஅவிழும் எழில் பொன் விரிந்த மேனி
தாமரையாள் தன்னை யேன்தட மார்பில் கொண்டாய்
[காரெழில்

அனுபல்லவி

பேரெழில் பெய்த பிழம்பான பெண்ணரசை
கண்ணருகில் வைத்தால் கருணை மிகும் என்று [காரெழில்

சரணம்

அச்சுபிச்சுவாக அடியேன் போல் இருப்போரின்
நச்சரிப்பிலிருந்து அந்த நாயகியை மீட்கவா
எச்சரிக்கையாய் இருந்து பின்னர் ஏதுமுறை செய்தாலும்
பச்சைக் குழந்தை நாங்கள் பரிவுக்கு எங்கு செல்வோம்
[காரெழில்

பாட்டு 25 கேதார கௌளை ராகம்

பல்லவி

காடும் மலையும் எழிற்காவும் கழனிகளும்
நாடுமிடம் எல்லாம் உறையும் நாரணனே [காடும்

அனுபல்லவி

தேடுமெந்தன் விழியிரண்டும் தேவா நீ எங்கென்று
பாடும் என் மனம் பழ மறைப் பொருள் தேடி [காடும்

சரணம்

வேங்கடம் வந்தோர் எல்லாம் வீழ்ந்தது வினையென்றார்
தீங்கறு பட்டதென்று திளைத்திடும் மகிழ்வில் வந்தேதன்
வேங்தடம் வாழ்பவனே என் விதிகளை இனி மாற்றும்
ஓங்கட்டும் கல்வி செல்வம் உன்னதமாய் நாளும் [காடும்

□ □ □

# உங்களுக்கு இது

மாறன் காலையே உணவென்று மாய்ந்த
மணவாள மாமுனிவன் தாள் பணிந்து
பாரோர் தொழுதேத்தும் பார்த்தசாரதியை
பாதாதி கேசமுதல் பைந்தமிழால் பாடிடவே
அன்னை ருக்மணித் தாய் அருள் கூர்ந்து விழிமலர்த்த
முன்னம் குரவர்களும் முன் நிற்கும் பெரியோரும்
அன்புடனே அடியேனை ஆசியிலே மிதக்கவிட
தெம்பும் திறமும் செந்தமிழும் ஆனேன் நான்

வண்ணக் கருமேகம் வடிவு கொண்டு ஒளி பெருக
கண்ணைப் பறிக்கின்ற பூக்காட்டின் நடுவினிலே
விண்ணளந்து நிற்கின்ற விந்தையதை என்னென்க
மாணிக்கத் தொட்டிலின் வைரமணித் தூரோ!
குருகூரன் வடித்த கொஞ்சம் தமிழ்த் தேனோ!
கொல்லிக் காவலனின் தாலாட்டுப் பாட்டோ!
கலியனை கரைத்து உவந்த கனிவென்னும் சுவையோ!
கைரவிணி கண்ட இக் கன்னலமுது!

இதைக் கண்டு கண்டு கரைந்து கசிந்துருகி
நொந்து—உண்ணும் ஆசையினால் உன் மத்தம்
பிடித்து என்னை அள்ளுறச் செய்த அமுதின் அடி
பற்றி—போகாப் பிணியெல்லாம் போய் மடிய
அளைந்துண்டு—ஞானமணித் தேரினிலே நண்பனுக்கு
நலமுரைத்த—நாதனை நாயகனை நல்லார்க்கு
நல்லானை—ஒரு நாள் ஒருபொழுது உடனிருந்து
பேர்பாட; வாழ்த்திடுக ஐயா மனமுவந்து!

பையா இதோ பார்! பார்புரக்கும் சாரதியை!
அவன் தானடா உன்தன் ஆசைக்கு மா மருந்து
பையப் போய் அந்தப் பாதத்தைப் பற்றிக் கொள்
உய்யும் வகை உண்டு உயர்வாய்!என வாழ்ததிடுக!
ஐயா! அவனது அருட் பெரும் கோலத்தால்
மெய்யழிந்து போன மிக்கோரில் தக்கோன் நான்
ஆரா வயிற்றுள்பின் போன என் நெஞ்சை
மீட்டு தருவோர்க்கு மேலும் புண்ணியமே!

# இது அவனுக்கு

ஆர்த்தொலிக்கும் கடலோரம்
அழகு கைரவிணி தீரம்
பார்த்தனுக்கு சாரதியே நீ
பார் புரக்க வந்ததினால்
கீர்த்தி எங்கும் எதிரொலித்து
கீத நாதம் சூழ்ந்ததைய்யா!
சேர்த்து வைத்த மாதவம் போற்
என் சிந்தை எல்லாம் நீ நிறைந்தாய்!

மூர்த்தி உந்தன் தாளிணையே
முத்தமிழால் பாடிடவே
நேர்த்தி இல்லாப் பேதை நெஞ்சம்
நினைத்ததுவும் ஆசையப்பா
சீர்த்தி மிக்க ஆழ்வாரும்
தேர்ந்து உரைத்த குரவர்களும்
பூர்த்தியுற வாழ்த்தி விட்டார்
புண்ணியமாய் போகும் ஐயா

நண்பனே என்றுன்னை
நானும் விளக்கின்றேன்
நலிவுற்ற உயிர்களுக்காய்
நாடித் துதிக்கின்றேன்
அன்பனே அன்பருக்கு
அன்பனாய் அருள்பவனே
யாரறிந்தார் உனை நானறிய
ஆடிடுக ஓர் நாடகமே!

எழுத்தறியேன் சீர் அறியேன்
இலக்கணங்கள் நானறியேன்
என்றாலும் என் உயிரே உன்
ஏற்றமெல்லாம் சிறிதறிவேன்
சிறதறிவேன் என்றாலும் சிறப்பாக்கிக்
காட்டிடவே
திருவல்லிக்கேணியிலே எல்லோரும்
ஏற்றிடவே

நீயாக என் நெஞ்சில்
    நினைவாக உயர்ந்து வர
தானாக அந்நிலையே
    தளையுடனே செய்யுளாக
தாளமுடன் ராகமுடன்
    தருணமுடன் பாட்டாகி
கேட்போரை எல்லாம்
    கிறங்க வைக்க வேணுமப்பா!

நாளதனை இரண்டாக்கி
    நல்லதொரு பொழுதாக்கி
பொழுதோடு உனக்காகும்
    பூசைகளைப் பாட்டாக்கி
பாட்டோடு நீ என்னைப்
    படுத்திய தோர் பாடெல்லாம்
நாட்டோர்கள் முன்னிலையில்
    நான் வைக்க வேணுமப்பா!

பாட்டு—1 திரு அநந்தல் ராகம் பூபாள விருத்தம்

வங்கக் கடலோரம் வரும் அலைகள் புரண்டு விழ
எங்கும் கதிர் பரப்பி எழுந்தானே இரவி அவன்
பங்கயத்தாள் மணவாளன் பார்த்தனுடை சாரதிக்கு
மங்களங்கள் கூறிவந்த மறையவர்கள் குடி வாழ்க!
சங்கடங்கள் தீர்த் தெங்கும் தர்மத்தின் நிழல் தோய
சங்கம் அன்று ஊதியவன் தன் சாத்திர வாயிலிலே
விஸ்வரூப சேவைக்கு விழி கூட்டி நிற்பவர்கள்
எண்ணம் போற் அவனும் எழிலாக சேவை தர
துதிபாடும் கீதங்கள் தொடருகின்ற அருச்சனைகள்
கதி நீயே என்றிரங்கி கை காட்டும் நாடகங்கள்
தவறுகளைப் பொறுக்க என்று தாடையிலே போட்டமடி.
அலருகின்ற நெஞ்சமுடன் அடைக்கலமே நாடிடுவோர்
கூடித் தொழுகின்ற கோலமணி வாயிற்கண்
ஜோடித்த தோரணம் போற் தொடர்ந்ததைய்யா பேரின்பம்
பேரின்பக் கடலாடி பெற்றதோர் பொலிவினிலே உன்
சீரெல்லாம் சிந்தையிலே சித்திரமாய் விரிந்ததப்பா!

**பாட்டு 2 கல்யாணி ராகம் ஆதிதாளம்**

**பல்லவி**

கல்யாண குணம் பாடக் கற்பிப்பயே உந்தன்
கரிய திருமேனியின் புகழ்பாட அருள்வாயே. (கல்)

**அனுபல்லவி**

அல்லும் பகலும் இசையமுதாய்த் தமிழ்பாடி
ஆழ்வார்கள் போலவே நான் அகம்கசிந்து மெய்யுருகி,
—உந்தன் (கல்

**சரணம்**

சொற் பொருள் நயமோடு சுவையேதும் குன்றுமல்
விற்பன்னர் பலர் கண்டு வியப்புறும் வண்ணம்
கற்பவர் எல்லோரும் கவின் கவின் என உரைப்ப
விற்பெரு விசயன் தன் சாரதியே! உந்தன் [கல்

**பாட்டு—3 மாயாமாளவ கௌளை ராகம் ஆதி தாளம்**

**பல்லவி**

நெஞ்சம் நிறைந்தது உன் திரு உருவம் அதன்
நினைவிற் படிந்ததும் உன் திரு நாமம் (நெஞ்)

**அனுபல்லவி**

கொஞ்சும் மொழி மாதர் குலவி மகிழும்
திருவல்லிக்கேணி வளர் ஐயா ஐயா என்று! (நெஞ்

**சரணம்—1**

தஞ்சம் என்ற அடியவர்க்காய் செய்ய தாமரைத்
தாளிணையும்—எழில்
மிஞ்சம் திருமார்பதனில் கொஞ்சுகின்ற திருமதளும்
கெஞ்சுகின்ற அடியவர்காய் கிறங்குகின்ற இரு விழியும்
பஞ்சமறக் கண்ட உள்ளம் பார்த்தசாரதே
சாரதே என்க! (நெஞ்

சரணம்—2

பஞ்சவர்கள் என்ன தந்தார் தூது சென்ருய் இந்தப்
பஞ்சை என்ன செய்யவில்லை பாராமுகம் கொண்டாய்
தஞ்சம் உந்தன் சேவடியாய் வந்தடைந்த எந்தனுக்கு
கொஞ்சம் தயவு செய்தாற் குறைந்து என்ன போய்விடும்

சரணம் சரணம் ஐயா! பார்த்தசாரதே
சரணம் ஐயா!
தருணம் தருணம் ஐயா! வந்து என்னை
தற்காத்தருளும் ஐயா! (நெஞ்)

பாட்டு—4 பிலகரி ராகம் ஆதி தாளம்

பல்லவி

என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே நீ
சென்னையம் பதி சேர்ந்து திருவல்லிக்கேணி தொழ! (என்)

அனுபல்லவி

முன்னம் பல்லாண்டுகள் முயன்று தவம் செய்தனையோ
கன்னித்தமிழ்ப் பாப்புனைந்த கரைந்துருகி
இரந்தனையோ! [என்]

சரணம்

விண்ணவர் துணுக்குறவே வேத விழாக்களும்
மண்ணவர் மகிழ்ந்துய்ய மாதமெல்லாம் திருநாளும்
கண்ணன் அவன் எம்பெருமான் ருக்மணியின் காதலன் தான்
கோயிற் கொண்ட
வண்ணமதைக் கண்டுகந்து வாழ்த்தி வணங்கிடவே [என்]

பாட்டு 5 வாசஸ்பதி ராகம் ஆதிதாளம்

பல்லவி

கடற்பாடும் கரைதனிலே கைரவிணி தகரினிலே
வாழுகின்ற சாரதிக்கு வணக்கம் சொன்னேன் [கடல்]

### அனுபல்லவி

இடர்ப்பாடு களைந்தெங்கும் இன்பத்தே பொங்க அந்த
இனியவனின் சேவடியை இறைஞ்சி நின்றேன் [கடல்]

### சரணம்

மங்கை மன்னனும் மா மயிலை ஆழ்வாரும்
வாழ்த்திய சேவடிக்கே வாழ்த்து உரைத்தேன்
சங்கம் முழங்கிடவும் சங்கடம் தொலைந்திடவும்
எங்கும் அவன் நாமமதே எதிரொலி செய்திடவும் [கடல்]

## பாட்டு 6 சிந்து பைரவி ராகம் தாளம் ஏகம் கண்டம்

### பல்லவி

எங்குண்டு இது போன்ற தெய்வம் ஏற்றமிகு
திருவல்லிக் கேணியில் அல்லாது! (எங்]

### அனுபல்லவி

அன்னையைப் போல் அன்பு பொழியும்
அத்தனைப் போற் பொருளை வேண்டும் பொழுதீயும் [எங்]

### சரணம்

ஆசானைப் போற் வழியைக் காட்டும்
அன்பான நண்பனாய் உதவிகள் புரியும்
கூசாமல் துணையாகத் தொடரும்
கூறுகின்ற வேளையில் பாலன் போற் கேட்கும [எங்]

## பாட்டு—7 பரவச நிலை ஏகதிஸ்ர தாலம்

எங்கு காணினும் உன் தோற்றமடா
இதய மெல்லாம் அந்தக் காட்சியடா
பொங்கு புனலெனவே என்னுள்ளம்
பூரித்துக் களித்துன்னைப் போற்றுதடா [எங்]

கங்குல் கரைந்திடும் போழ்தினிலே அந்தக்
காசும கறைந்திடும் வேளையிலே
தங்க நிறக்கதிர் தாவும் அலைகளை
தழுவியே கரை சேர்க்கும் பாங்கினிலே [எங்]

ஓடை நீரின் பளபளப்பில் அதை
ஒட்டி நிற்கும் மர நிழலசைவில் இன்னும்
ஜாடை காட்டிடும் புவனமெல்லாம் உந்தன்
சத்திய தரிசனம் நிச்சயமே! [எங்]

திருவல்லிக்கேணியில் தானிருந்து தன்னைச் சிந்தை
செய்வோருக்கு உடனிருந்து
அருளைப் பொழிந்திடும் தெய்வம் ஐயா இந்த
அகிலமெல்லாம் உந்தன் சொந்தம் ஐயா! [எங்]

பேருனக் காயிரம் இருந்திடினும் என்னைப்
பிச்சியாக்கி நிதம் முறுவலித்த பார்த்த
சாரதே என்று நான் சாற்றிடுவேன்
என்னைச் சார்ந்த வினைகள் முழுதகலும் [எங்]

சிந்தை செயல்கள் சிறந்திடவே எங்கும்
சீர்த்தியும் கீர்த்தியும் தெளிவுறவே
வந்தனை ஆயிரம் செய்து நின்றேன் எந்தன்
மனத்துள்ளே உன்னை வைத்தலர்ந்தேன் [எங்]

## பாட்டு—8 செஞ்சுருட்டி இராகம்

### பல்லவி

பல்லாண்டு பாட வந்வேன் பார்த்தருள்க
பார்த்தனுக்கு சாரதியே கேட்டருள்க [பல்]

### அனுபல்லவி

சொல்லாளும் தோதெனக்கு சொல்லித்தருக
சுவையூட்டும் பண்ணெல்லாம் கொடுத்தருள்க [பல்]

### சரணம்—1

எல்லோருக்கும் இன்பத்தை தந்தருள்க அவர்
இதயத்தே நீ இருக்கை கொண்டருள்க
கல்லார்க்கும் இல்லார்க்கும் உன் கருணை அவர்
கை நீட்டும் போழ்தினிலே கிடைத்தருள்க! [பல்]

சரணம்—2

வில்லிபுத்தூர் வேதியர் கோன் அனுபவித்த
வியன்மிகு நல் அடைவுகளில் நான்மூழ்க
நல்லதொரு வரமெனக்கே தந்திடுவாய் ருக்மணி
நாயகனே நாரணனே வாழ்த்திடுவாய் [பல்]

பாட்டு—9 குந்தலவராளி ராகம் ஆதி தாளம்

பல்லவி

பொன்னடிக்கு தண்டனிட்டேன் ஏற்றருள்க
புவியாளும் மன்னவனே காத்திருள்க [பொன்]

அனுபல்லவி

வண்ணமணி மாடஞ்சூழ் மாவல்லிக்கேணியை
மறக்கவில்லை மறந்தால் வாழ்வுமில்லை எனக்கு [பொன்]

சரணம்—1

நெஞ்சமெல்லாம் உன் நினைவு நினைவு எல்லாம் உன் கோலம்
அன்னை ருக்மணி தாயை அணைந்து நிற்கும் அலங்காரம்
செம் பஞ்சுக் குழம்பாலே தீட்டியதோர் ஓவியம் போற்
கண் நிறைந்த காட்சி என்னை கை கொடுத்தும்
காக்குதப்பா [பொன்]

பாட்டு 10 நடைச்சந்தம் சதுஸ்ர ஏகதாளம்

கடற்கரை யோரம் குடியிருக்கும் ஒரு
கருந்தெய்வம் அது நம் தெய்வம்
மடமணமாதை வலப்புற மணைத்து வாழ்விக்கும்
பெருந்தெய்வம்—நம்மை
வாழ்விக்கும் பெருந்தெய்வம் [கடற்]

மின்னும் முகத்தில் மீசை இலங்க, எழில்
மேவும் இடைதனில் கத்தி விளங்க
பண்ணிய பாப பழவினையகற்றி
பாதத்தில் சேர்க்கும் தெய்வம் தன்
பாதத்தில் சேர்க்கும் தெய்வம் [கடற்]

திடமனதுடன் நாம் தினந்தொழுதேத்தும்
திருவல்லிக்கேணி தெய்வம்
தடவரைபோல தரிசனம் தந்து
சங்கடம் போக்கிடும் தெய்வம் அன்பர்
சங்கடம் போக்கிடும் தெய்வம்

சாரதி என்ெறாரு தெய்வம் ஆண்ட
சராச்சரம் ஆளும் தெய்வம்
பார்த்து பணிந்ததன் பாதம் பற்றினல்
பரிவுடன் தாய்போல் பேணிடும் தெய்வம் நாம்
பரிவுடன் தாயாய் பற்றிடுந் தெய்வம் [கடற்]

சிந்தை ஒன்றாய் சேர்ப்பீர் தேவகி
செல்வனையே தொழுவீர்
சொந்தம் அவனே துணையும் அவனே
சொல்லி வணங்குவோம் வாரீர்—மலர்
தூவி வணங்குவோர் வாரீர் [கடற்]

தெய்வங்கள் போற்றும் தெய்வம் அவன்
செழுமறை ஏற்றும் தெய்வம்
ஏழைஎளியவர் இயலாதோர்க்கு அவன்
எப்போதும் உதவிடும் தெய்வம்
முப்போழ்தும் உதவிடும் தெய்வம் [கடற்]

பாட்டு 11 பைரவி ராகத்தொடுப்பு தாளம் ஆதி

**அன்பர்களின் மனோதர்மப் படியும் பாடலாம்**

கால சந்திப் பூஜைக்கு
கைங்கர்ய பரர்களெல்லாம்
காத்து உவந்து வந்தாரே
கண்டு உய்வோம்
கோலம் ஆயிரமாய் கொண்ட
மணி வண்ணனுக்கு
கூற வந்தார் பல்லாண்டு
பாடிடுவோர்

வண்ணக்கிளி மண்டபத்தில்
வந்தமர்ந்த மறையவர்தம்
வாய் மொழியில் மணக்குதம்மா
அவன் புகழே
எண்ணமெல்லாம் அவனாக
இனியதொரு சூழலிலே
எக்காளம் முழங்கிடவே
எழுந்த உள்ளம்

திருமிகு செறிவோடு
திகழ்தொளிரும் சாரதிக்கு
செய்தாரே திரு
ஆராதனங்கள்
அருள்மிகு திருமுக
அன்பன் கனிவினிலே
அப்போழ்து தோய்ந்த
நெஞ்சம் குதித்ததம்மா

தீர்த்தம் சடாரி, வினை
தீர்க்கும் பிரசாதங்கள்
வரிசையுற அடியவர்க்கே
வழங்கிய பின்
ஈர்த்த அன்பர் குழாம்
எழுப்பிய சரணங்கள்
எதிரொலியே கோவிலெங்கும்
நிறைந்ததம்மா

ஆநந்தப் பெருக்கினிலே
அடங்கிய என் நெஞ்சு
யாதவ குலாதிபனின்
புகழ் பாட
ஞானி நம்மாழ்வாரின்
நயமான கருத்தினிலே
நல்லதொரு இடம்நாடி
மகிழ்ந்ததம்மா!

பாட்டு 12 பிலகரி ராகம் பீடு தொகையரா

செக்கர் மா முகிலுருத்து என்னும்
திரு ஆசிரியம் எந்தன்
சிந்தையைத் திரையாக்க மாறன்
தீட்டியநல் ஓவியமே

அழகேறித் தொடர்ந்ததுகாண்
அகம் புறத்தை நான்மறக்க
பக்கத்தொன்றாகப் பார்த்த
பரவசத்தை

செப்பும் திறனில்லையே சிறப்பில்லா
இம் மடையனுக்கு
எழு கதிரும் தண்நிலவும்
பசுமலையும் கடலுமாய்

காரார் திருமேனி கிடந்த
வனப்பை எல்லாம்
சீரார்குரு கூரான் செப்பியதை
நுகர்ந்து அயர்ந்தேன்

தெய்வக் குழாங்கள் தம்
சிரமிசைச் சூடிய
தீந்தமிழ் சடகோபன் சித்தத்தே
ஆடிய

செந்திருத்தாய் நிதம்
உவந்து அயரத் தடவிய
செம்பொற்கமலமலர் சேவடிக்கே
எனை வார்த்தேன்

வார்த்தையிலே பேர்த்தெடுக்கும்
வடிவா அவன் கோலம்
சேர்த்த திருவாய் மொழியின்
திகழ்வென்றே ஒளிருதம்மா!

கைரவிணிக் கரை கண்டகவின்
மிகும் அற்புதத்தை
கண்டு தினம் தொழுவோர்
காசினியின் மாசறுப்பர்

**பாட்டு 13** **விருத்தம்**

கருணைத்திரு உருவாய் கைரவிணிக் கரைதனிலே
கண்குளிரக் காட்சிதரும் கண்ணனவன் கோலமென்ன

சுருதிப் பொருளோ தொன்மறையின் செழுங்கருத்தோ
அருணன் ஆயிரமாய் அழகொளிர மிளிர்வதுவோ!

என்னதவம் செய்தேன் எத்தனைநாள் நோன்பிருந்தேன்
வண்ணக் கலைவை யொன்றின் வடிவழகைக்காண்பதற்கு

கட்டழகுக் கொட்டிலிலே கவின் நடந்து வருகுதம்மா
மட்டில்லா அப்பேரெழிலை மாடவீதிதனில் காண்பீர்!

**பாட்டு 14 சுத்த தன்யாசி இராகம் ஆதி தாளம் அரை இடம்**

**பல்லவி**

திருவல்லிக்கேணிக்குச் சென்றேன்
செழுமறையின் உருவை அங்கு கண்டேன் தோழி [திரு]

**அனுபல்லவி**

பொருளெல்லாம் பொருளாக பொலிவொன்றே வடிவாக
அருளொன்றே கனிவாக அன்பதைத் தனதாக்கும் [திரு]

**சரணம் 1**

வசந்த விழாவாக மலர்த்தோட்டச் சிரிப்பாக
மங்கலம் அங்கெங்கும் மகிழ்ந்துவரக் கண்டேன்
மங்கலத்தின் நடுவினிலே மங்கை ருக்மிணி நாதன்
தங்கிஇருக்கக் கண்டேன் சரணம் சரணம் என்றேன் [திரு]

**சரணம் 2**

உயர்ந்த மனிதரெல்லாம் ஓர் குழுவாய் கூட
உருவாகும் எண்ணங்களின் உயர்வை அங்கு உணர்ந்தேன்
இசைந்து என்னையவன் ஏற்றுலோ இன்னும் பல
இன்ப நலங்காண்பேன் இதயம் அவனுவேன் [திரு]

பாட்டு 15 யது குல காம்போதி ராகம் ஆதி தாளம்

பல்லவி

எண்ணங்கள் ஆயிரம் ஒரு கோடி எந்தன்
இதயத்துள் எழுகுதே என் செய்வேன் [எண்]

அனுபல்லவி

கண்ணனே காரெரளி வண்ணனே மா மயிலை
அல்லிக்கேணி வாழும் அண்ணலே உன்னைக்காண காண
[எண்]

சரணம்

சொர்ணத்தால் துண் நிறுத்தி தூமணிமாடம் கண்டு
அன்னத்தைப் போல மெல்ல ஆடிடும் ஊஞ்சல் கட்டி
வண்ணத்தில் ஒளிரும் நல்ல மாணிக்க பலகை சேர்த்து
என் நெஞ்சை அதில் விரித்து நீ எழுந்தருளக் காண
வேண்டும் [எண்]

சரணம் 2

மாமறை வாணர்கோடி மாறன்தமிழ் கற்ற பல்லோர்
சூழ்ந்திருந்து உன்னை ஏற்றும் அகத்தினில் நானும் ஆழ
தேவர்கள் தினமும் துய்க்கும் திருமுக கனிவும் பொலிவும்
சேயனும் எனையும் ஆள சிந்தை உன் கோவிலாக ஆக
[எண்]

(இந்த 15-ம் பாட்டு ரேடியோவில் பாடப்பட்டது.)

பாட்டு 16 செஞ்சுருட்டி இராகம் ரூபக தாளம்

பல்லவி

பாலின் சுவையோ பழரசமோ
பார்த்த சாரதி எனும் சொல்லே!
தேனோ கன்னல் செழும் பிழிவோ
திருவல்லிக்கேணி எனும் பதியே! (பாலி)

நெஞ்சில் நினைவில் நீங்காமல்
நேரமெல்லாம் இணைந்து ஒன்றாக
கொஞ்சும் குழந்தையின் நல்உணர்வை
குலவ விடுமோர் அற்புதமோ! (பாலி)

சரணம்

ஆயர் குலத்தின் அருட் கொழுந்தே
அல்லிக்கேணியின் பெருவாழ்வே
மாயம் பல செய்து உலகாளும்
மாதவனே உன் சீர் எண்ணி
தோயும் உள்ளம் காண்பதெல்லாம்
சுகமாய் தொடரும் யோக நிலை
தாயின் அன்பைப் பொழிபவனே
தாள் பற்றி என்றும் வாழ்ந்திடுவேன்! (பால்)

பாட்டு 17 விருத்தம்

வேத விழுப்பொருளே விண்ணவர்க்கு முழு முதலே
நாத மயமாகி நாற்றிசையும் ஒளி வளர
கீதை மொழி ஈந்த கீர்த்திக்கு வாழ்த்துரைத்து
பாதம் பணிகின்றேன் பாடு என அருளிடுயே

வங்கக் கடலோரம் மாதாருக்மிணியை
இங்கிதமாய் உடன் கொண்டு இரு நிலத்தைக் காப்பவனே
உன் தங்கக் குணமதனைத் தமிழினில் நான் பாடிடவே
சந்தமொடு சொல்லீந்து தகுதியுடன் தாருமைய்யர்

அருளாய ஆழிதன்னில் அளைந்து உவந்து அகழ்ந்தெடுத்த
மருளாத உண்மைதனை மன்றத்து ஏற்றிடுவேன்
திருவல்லிக் கேணிதனில் தீனர் தமைகாக்க என்று
திருக்கோவில் கொண்டது தான் திருவருளின் மணிமுடியாம்

அப்பா எனைப்பார் என்று அழைக்கின்ற பேரை எல்லாம்
தப்பாமல் காக்கின்ற தனிச் சுடரே உன் கருணை
செப்பாதிருந்திடில்லை சிந்தை யிருள் வசமாகும்
எப்போழ்தும் அழைத்திடுவேன் எமையாள வாருமென்று

பாட்டு 18 இராகம் சிம்மேந்திரமத்திமம் தாளம் ஆதி

பல்லவி

அடித்தாலும் அணைத்தாலும் நீ தான் ஐயா—இந்த
அபலைக்கு வேறொரு துணையேதைய்யா மெய்யா (அடிக்)

அனுபல்லவி

பிடித்தாலும் விடுத்தாலும் பிள்ளை நான் ஐயா
தடுத்தாள வேண்டும் உன் சரணம் சரணம் ஐயா (அடித்)

சரணம் 1

தடித்த ஓர் அலைபுரண்டு தரை கழுவி முன் ஓடும்
மடித்த ஓர் அலைவந்து மாவலிக்கேணி என்னும்
அடுத்தோர் அலைஎழுந்துன் அடிவருடி வாழ்க என்னும்
கடலோரம் கோயிற் கொண்ட கார்முகிற் வண்ணா எனை
(அடிக்)

சரணம் 2

இடித்துரைத்தும் கேளாமல் இறுமாப்பு கொண்ட வரை
அடித்தொழித்து அதர்மத்தை அன்றே வெற்றி கொள்ள
தொடுத்தாயே பாரதப்போர் தொலைத்தாயே இருளாட்சி
தொடுத்தாயே கீதைமொழி குணசீலா வாழ்த்துகிறேன்
(அடித்)

பாட்டு 19 சங்கராபரண இராகம்—ஆதிதாளம்

பல்லவி

பார்த்தசாரதியைப் பாடு—அவன்
பாமலர் எங்கு தேடு நாடு மனமே [பார்]

அனுபல்லவி

தேர்தட்டில் நண்பனுக்கு தனிவேதம் சமைத்தவன்
தீரனே நம் குறையை பாரானோ என எண்ணி [பார்]

சரணம்

ஊருணி நீர் போல உள்ளது அவன் கருணை
யார் வேண்டுமானாலும் அள்ளிப் பருகிடலாம்
தேரிய பலன் கிட்ட நெறிமுறை வகையுண்டு
நெஞ்சில் அவை கூட நெருங்கி வருவான் அவன் [பார்

பாட்டு 20 சகஞ ராகம் ஆதி தாளம்

பல்லவி

அளப்பருங்கருணையிலே ஆழ்ந்து உவந்தேன்
ஐயா அல்லிக்கேணி அன்பருக்கு அன்பனே—உன் [அளப்]

அனுபல்லவி

வளப்பமில்லாச் சிறுவன் வகையேதும் அறியாதான்
வந்து நின்றேன் சன்னதியில் வாழ்க என்ருய் அந்தோ!
[அளப்]

சரணம் 1

அன்னை அத்தன் ஆசானுய் அருமைமிகும் நண்பனுமாய்
என்னுடனே எப்போழ்தும் இருந்தாளும் மன்னவனுய
பண்ணரிய தவம் பயனுய் பார்த்தனுக்கு சாரதியே
இன்று போல் என்றுமிந்த எளியேனை ஈர்த்தருள்வாய்
[அளப்]

சரணம் 2

வினை சூழும் வேளையிலும் பிற வேதனையில் மறந்தாலும்
மணம் பரவும் மங்கல மகிழ்வினில் அயர்ந்தாலும்
அணையேறி நான் ஒரு ஆளாக நின்ருலும்
துணையாக நீ இருந்து தொல்லை தவிர்த்திடுவாய் [அளப்]

பாட்டு 21 பிலஹரி ராகம்—ஜம்பை தாளம்

பல்லவி

செங்கமல மலர்பாதம் தேடி வந்தேன்-உன்சீரையெல்லாம்
மங்களமாய்ப்பாடி வந்தேன் ஐயா [செங்]

அனுபல்லவி

பொங்கும் கடல் புகழ் பாடும் நேர்த்தியிலே
பொற்கொடியாள் ருக்மிணித் தாய் பணிந்து பரவும்
அநத [செங்]

சரணம்

மறையாழி தொழுகின்ற அவதாரங்கள்
பலவாக நீ கொண்டாய் பணிகின்றேன்
சிறை செய்வாய் வறுமையை நீ சீக்கிரத்தில்
தீரும் ஐயா பலநோவும் புவிததளத்தில் [செங்]

பாட்டு 22 காம்போதி ராகம் ஆதி தாளம்

பல்லவி

பார்த்த சாரதி உன்னையன்றி
பாரினில் ஏது கதி ஐயா [பார்]

அனுபல்லவி

காக்கும் கடவுள் நீ என்று நிதம் நானும்
கைதொழுவு கசிந்துருகி கண்ணீர் விட்டதும்
பொய்யோ! [பார்]

சரணம்

ஆர்க்கும் புவிஎல்லாம் உன் ஆளுகை தான் என்றால்
பார்க்கும் இடமெல்லாம் பரவசம்தானே அருள்
வார்க்கும் இருவிழிகள் மறந்தது ஏன் என்னே!
யார்க்கு என் செய்தேன் அறியேன் பொருத்தருள்க! [பார்]

பாட்டு 23 பிலகரி ராகம் ஆதி தாளம்

பல்லவி

கீதை தந்த மேதைக்கே நீ கீர்த்தி கூறு
கீர்த்திக்கு கீர்த்தி சேர கீதமபாடு அந்த [கீதை]

அனுபல்லவி

பேதை என வாழ்ந்துழன்று பிதற்றி திரியாதே
சோதனைக்கு ஆளாகித் தொல்லைதுயர் கொள்ளாதே [கீதை]

சரணம் 1

நாதன் மிக நல்லவன் நங்கை ருக்மிணி கேள்வன்
நலிந்துழலும் உயிர்கட்டு நலம்பலவே செய்ய
பாதை யொன்றை வகுத்தான் பகவத் கீதை என்றான்
வேதமாய் அதை உணர்நது வேதனைகள் களைவாய் [கீதை]

சரணம் 2

கடமைகளைச் சொல்லி கண்டு நடக்க என்றான்
உரிமைகளைப் பெற உழைத்தாலே ஆச்சென்றான்
மடமை மிகும் போழ்து வந்திடுவேன் என்றான்
திடமாகவே சொன்னான் தீமை ஒழிப்பேன் என்று [கீதை]

சரணம் 3

ஞானக்கருவூலம் நல்லோரின் பெருவிருந்து
கான செய்த நம் கண்ணனின் முத்தற் கருணை
வானநாடு செல்ல வல்லதோர் வழி காட்டி
பேணிக் காக்க வல்ல பெருநிதியம் அந்நூல் [கீதை]

பாட்டு 24 நவராக மாளிகை அணைத்துமே

முதலில் கல்யாணி ராகம் ஆதி தாளம்

பல்லவி

திருவல்லிக்கேணியில் தேவகி மைந்தனுக்கு
சித்திரையில் திருநாளாம் செல்லுவோம் வா

அனுபல்லவி

வாடி நீ மாதவத்தோய் வண் கருணைப் பேராளன்
வரும் வீதி ஒருபுறத்தே அமர்ந்திருப்போம்
தேடி அவன் புகழைப் பாடி வரும் அன்பர்
நல்லுணர்வில் நாமொன்றாய் கலந்திடுவோம் [திரு]

சரணம் அடாணா ராகம்

நாளொரு திருக்கோலம் பொழுதொரு வாகனம்
நம் நெஞ்சை அள்ளி உண்ணும் அலங்காரம்
ஏனடி அத்திருடனுக்கு இருப்போரை ஈர்த்திடவா
இருக்கின்ற நாமிருவர் போதாவா [திரு]

ஆனந்த பைரவி

நீலத்திருமேனியிலே நெஞ்சினிலே கொஞ்சுகின்ற
வஞ்சியவள் செய்த தவம் வாராதோ நம் வரையில்
காலை இளம் கதிர் போல காணும் அவன் திருமுகந்தான்
கை வளையைக் கழற்றி மெல்லக் கருத்து அழியச் செய்ததடி.

காம்போதி இராகம்

பட்டுப் பீதாம்பரமும் பகட்டுநடையும் கொண்டு
எட்டி அவன் நடக்கும் எழிற் பாங்கிலே
கெட்டதடி கிளிமொழியார் கிண்ணாரச் பேச்செல்லாம்
விட்ட மனம் கிட்ட அவன் பின் ஓடுரார்

### ஷண்முகப்ரியா ராகம்

பெண்மையைப் போலொரு அலங்காரம் கண்ட நல்
பெற்றவட்கும் வரும் ஆங்காரம் முகந்
தண்மையிலே தெறிக்குப் கப்பீரம் நாம்
நமை இழந்த தற்கோர் ஆதாரம்!

### சிந்து பைரவி ராகம்

அழகை வனப்பை எல்லாம் அப்பி வரும் அவனை
கிள்ளி எடுத்து மெல்ல கிண்ணாரமாய்க் கொஞ்ச
உள்ளம் துடிக்குடி ஒரோ இது வீதியன்றோ
என்ன செய்ய சொல்லடியோ ஏக்கம் அவனுனால்!

### நாட்டைக்குறிஞ்சி இராகம்

ஒய்யாரமே அவன் வழிவாகி நம்மை
உருக்குலைத்து அலைத்திடவே எண்ணியதோ அடி
மெய்யார அவன் வீதி எழும் அழகு நாம்
மேவுகின்ற அழகை எல்லாம் விழுங்கியதோ!

### ஆரபி ராகம்

வாகனம் மாற்றி அவன் வரும் கோலம் நம்மில்
வாழுகின்ற தத்துவத்தின் அடையாளம்
சேவிக்க சிரமே சிந்திக்க மனமே நீ
செய்தது புண்ணியம் திருஅல்லிக்கேணி வந்தாய்

### மோகன ராகம்

பல்லாண்டு பாடுநர் பலவேதம் சொல்பவர்
நல்லிசை நாகசுர நாவாணர் வாழ்த்தொலிகள்
புல்லரிக்குது உடல் புளகத்தில் தோயும் மனம்
கள்ளம் செய்ய பட்டோமடி கள்வனது திருநாளில்

### அம்சாநந்தி ராகம்

ஊஞ்சலில் ஆடிடுவான் பத்தி உலாத்தலில் அனைவரின்
உளம் நடப்பான்
வாஞ்சையில் தாயானன் அந்த வண்ணமலரடிக்கே
தண்டனிட்டேன்
ஓம் எனத்தொழுதிடுவோம் அந்த ஒலியினில் அவன் மொழி
கேட்கட்டுமே
நாமங்கள் ஆயிரம் கொண்டவனை நாம் கண்டு உய்த்த
நலம் பெறுவோம் [திரு]

பாட்டு 25 யமுனு கல்யாணி ராகம் பதம்

பல்லவி

கலையோ கைவண்ணமோ கற்றதோர் வித்தையோ!
கைரவிணிக்கள்ளவா நீ என்னைக் கவர்ந்து அழித்த கதை
[கலையோ]

அனுபல்லவி

சுந்திரமந்திர மாயம் சொகுசு சுகஜாலமெல்லாம்
தந்திரமாய் செய்த தெல்லாம் சான்ருேரிடம் சொல்வேன்
[கலையோ]

சரணம் 1

ஐயா அரசே என் அழகை உன் இன்பம் என்ருல்
அருகில் இருந்ததை அனுபவித்தல் ஆகாதோ
மெய்யாக ஒன்று சொல்வேன் நீ மிதித்தாலும் அணைத்தாலும்
வரமாகக் கொள்பவள்நான் வந்தென்னை வாழவிடு
[கலையோ]

சரணம் 2

மயக்கும் அந்திப்போழ்து வந்தென்னை வாட்டுமுன்பு
சுந்திரா வந்து விடு! தோழி நீ அழைத்துவாடி
பைய அடி பெயர்க்கும் அவன் பாங்கை அறிவாய் நீ
கொண்டு வா சாரதியை கூட்டத்தில் கேட்டிடுவோம்
[கலையோ]

பாட்டு 26 பைரவி ராகம்

உலகளந்த உத்தமர்க்கு உச்சிக்கால பூஜை இப்போ
ஒருபுறமாய் அமர்ந்ததனை சேவிப்போம்
வண்ண வடிவழகன் மலர்மகள் தொழும் நாதன்
மதிய உணவு கொள்ளப் போகின்ருன்

பட்டில் திரையும் இட்டார் பரிசாரகரும் வந்தார்
பக்தியுடன் தளிகையதை சிரம் தூக்கி
கண கணவென மணி அடித்தார் கண்ணன் உண்ணும்
போழ்தினிலே
கனிவோடு அவன் உன்ன வேண்டுமென்று

அன்னை இல்லை அத்தனில்லை யார் அறிவார் அவன் பசியை
அகிலமதை ஆளுகின்ற அயர்வு அல்லவா
சுவைகூட்டி சொகுசாக அவன் சுவைத்து உண்ணப்
படைப்பவர்கள்
சுந்திரத் திறம் அமைந்த என் நாட்டோர் அல்லவா

நந்தமுகுந்தனருள் நாளும் நமை ஆள
நல்லவர் அடியொற்றி தொழுதிடுவோம்
நத்தைக் கொரு கூடும் வைத்து நண்டிக்கொரு ஓடும் வைத்து
நலமுறக் காப்பது போற் நமைக்காப்பான்

தேயும் உடல் சாயுமுன்னே திருவல்லிக்கேணி சென்று
செப்பிய கீதையின் திறமுறைப் போம்
வாய்த்த இந்த பிறவியின் மாண்பதனைக் காத்திடவே
மாவல்லிக் கேணியான் துணை தருக!

பாட்டு 27 கானடா இராகம் ஆதி தாளம்

பல்லவி

ஆயிரமாயிரம் வணக்கங்கள் அர்ச்சுனன் நண்பனுக்கு
தாயினும் சாலத் தயவினைப் பொழியும் சாரதியே உனக்கு (ஆயி)

அனுபல்லவி

பாயிரவேதங்கள் பகுத்தறிந்துரைத்த பரிவினை வணங்குகிறேன்
நீயின்றி உலகில் நிகழ்வில்லை என நான் நெஞ்சார உணருகிறேன்
(ஆயி)

சரணம்

வேய்குழல் நாதத்தில் மேதினியனைத்தையும் மிதக்க விடுபவன் நீ
வாய்த்த நற்றமிழில் மாயனே உன்புகழ் வளர்க்க விழைபவன் நான்
தூயனே தூயவர் தம் தூய்மையில் தோய்பவனே தொடங்குக என
அருள்க
ஆயனே உந்தன் அழகு எனை ஆளட்டும் அருமையாய் வந்தருள்க.

**பாட்டு 28** **கானடா இராகம்**

**பல்லவி**

பொல்லாத பூதகியை இல்லாமல் செய்தவனே
இல்லாமை தனையேன் மறந்து விட்டாய் [பொல்]

**அனுபல்லவி**

இல்லாமையால் பல இயலாமமை தோன்றிட
நில்லாமை ஆனதப்பா நியாயமெல்லாம் இங்கு [பொல்]

**சரணம்**

கல்லாமை இன்றி எங்கும் நல்லாண்மை குறைந்தது
செல்லாமையால் சில செயலாண்மை மறைந்தது
விள்ளுமையால் நலம் விளையாமை பெருகுமென்று
விரைந்தேன் கைரவிணி வேண்டி தொழுகின்றேன் [பொல்]

**பாட்டு 29** **கல்யாணி இராகம்**

**பல்லவி**

நல்லிசை இன்னிசை நாதத்தில் நடமாடும்
அல்லிக்கேணியை இந்த அடியேனும் பாடவந்தேன் [நல்]

**அனுபல்லவி**

என்னிசையால் இங்கு எழில்கூடும் என்றின்று
மன்னவனே முன்னம் வாழ்த்துரைப்பாய்—நல்

**சரணம்**

கானமா மழை பொழிந்து உன்னை கசிந்துருகச்செய்தவர்கள்
வீணையால் என் நெஞ்சை மீட்டிடல் ஆகாதோ
ஏனமாய் நிலங்கிண்ட இலக்குமியின் மணவாளா
பானமாய் என் பாட்டையும் பருகிக் களியும் ஐயா

**பாட்டு 30 சக்கர வாகம் இராகம் ஏகம் கண்ட தாளம்**

சந்தமொடு சீரோடு தாளமொடு பண்ணுளும்
தகுதியை அருள்புரிகவே
நான் பாடும் தகுதியை அருள் புரிகவே!

வந்தவர்கள் அன்றுன்னை வாழ்த்தியது போலவே
நான் வாழ்த்தும் முறை சொல்கவே

பல்லாண்டு பாடிய ஆழ்வார்கள் போலுன்னை
பாடிடும் திறங்கூடவே பரவிடும் அறம் சேரவே

அன்பாக வருக அழகாக வருக அசோதை
மடியிலே அழகாகத்தவழும் மழலையாய்
ஓடி வருக! பாட வருக!

அன்றந்தப் போரிலே சக்கரம் சுழற்றிய
ஆவேசமுடனும் வருகவே! வந்திடுக ஐயா
தந்திடுக கனிவு! செந்திருத் தாய் போல!

**பாட்டு 31 சண்முகப்பிரியா ராகம் ஆதி தாளம்**

**பல்லவி**

ஒன்று சொல்வேன் அதை உணர்நெஞ்சே
உத்தமனை அல்லிக்கேணி தத்துவனைப் பணிவாய் (ஒன்று)

**அனுபல்லவி**

நன்றொன்றே செய்பனை ருக்மிணி நாயகனை
நாடி நிதம் தொழ நலிந்தோடும் பழவினைகள் (ஒன்று)

**சரணம்**

கன்று கொண்டு விளா எறிந்த கதையதுவாய் அவன்
ஒன்று கொண்டு ஒன்றை உணர வைப்பான்
அன்றும் இன்றும் என்றும் அவன் அகிலமதைக் காக்க
ஆயிரம் செய்ததுண்டு அதிலும் அறம் உண்டு (ஒன்று)

பாட்டு 32 பூபாளம் இராகம் ஆதிதாளம்

பல்லவி

தூது சென்ற சேவடியைத் தொழுதிருப்பேன் இந்தத்
தொல் புவியில் அது தொடர வேண்டி நிற்பேன் [தூது]

அனுபல்லவி

சோதிச் சுடரொளியாய் நூறு சோதரர் தம் சபையினிலே
வாதிட்ட மாண்பை எண்ணி வணங்குகிறேன் [தூது]

சரணம்

மாடக் கொடி மதிள்சூழ் வண்ண நெடும் வீதியிலே
மன்னவர்கள் புடைசூழ மதயானை போல்
ராஜநடை போட்டு வந்து நல்லவன் விதுரன் குடில்
நண்ணியதோர் அன்பை எண்ணி நான் கரைவேன் [தூது]

வியப்பு மிகக் கொண்டவர்கள் விழி விரித்து நிற்கையிலே
விதுரன் தந்த பழத்தோலை உண்ட அந்த
மெய்யுருகும் காட்சிதனை விதவிதமாய்ப் பாட
வித்தகனே! மெய்ப்பொருளே! வேண்டுகிறேன் [தூது]

பாட்டு 33 காபி இராகம்

பல்லவி

வெண்ணிலவு விளையாடும் முதத்தில் உன் விழி இரண்டும்
கைரவிணித் தாமரையோ! அந்தத்
தண்ணிலவைத் தழுவுகின்ற மேனி
சாலையிலே சோலை கொட்டும் எழிலோ! [வெண்]

அனுபல்லவி

சின்னவண்ணக் கண்ணா என்னைப் பாரு! கொஞ்சம்
சிரித்து மகிழ்ந்து விளையாடு
கொஞ்சும் தமிழ் கொண்டு வந்தேன் கேளு
குருகையூரான் போலிருக்காகூறு [வெண்]

சரணம்

ஒளிபெருக்கி உள்ளமதில் ஆடும் உயிர், உன்னை
எங்கே என்று தேடும் பாடும்
கள்ளம் இல்லை என் நெஞ்சில் கண்ணா! உயிர் உனை
காணுவரை வேறெதுவும் எண்ணா! [வெண்]

பாட்டு 34 பாகேஸ்வரி இராகம் கண்டஜம்பை தாளம்

மாதொருத்தி மானம் காத்த மணிவண்ணக் கண்ணா!
மாவல்லிக்கேணியிலே வந்து நின்ற மன்னா!

தீதகற்றும் செழுமறையே செந்தமிழே கண்ணா!
சீர்பாடச் சேர்ந்து வந்தோம் சேவைதா மன்னா!

ருக்மிணியின் நாயகனே தத்துவனே கண்ணா
பக்கம் வந்து பாதுகாப்பாய் பாயும் முகில்வண்ணா!

கீதை தந்த மேதை நீயே கேசவனே கண்ணா
பாதை நன்றாய் காட்டிடுவாய் பாயும் நீர் வண்ணா!

சரணங்கள் பாடி வந்தோம் தயவு செய் கண்ணா
மரணமதை வென்றிடவே வழிசொன்னால் என்ன!

கடல் ஓரம் கடல்போல காட்சிதரும் கண்ணா;
கை தொழுதோம் கருணை செய்கைவிணி மன்னா!

உன் குழலில் ஊதுவது உலகாளும் பண்ணா
உடன் வறுமை நீக்கிடுவாய் உமையவளின் அண்ணா!

நவநீதம் தின்ற வாயில் உண்டதென்ன மண்ணா!
நற்றாய்க்கு ஆடிய நாடகத்தில் ஒண்ணா!

நாயகற்கு நாயகனாய் இருபது எங்குவிண்ணா
பாயும் அன்பு கூடுகின்ற பக்தர்களின் கண் ஆ!

பாட்டு 35 கேதார இராகம்

உள்ளமே என்னோடு ஓடி வாராய்
ஓடுகின்ற ஓரலையை தாவுகின்ற வேரலை
சாடி வந்து கரை தழுவிப்பாடிடும் நகர்காண,
(உள்ளமே)

கள்ளமே இல்லாத நல்ல மறைவாணர்கள்
சொல்லறிய துதிபாடி தொல்புவி, வாழவே
வில் விசயன் நன்பனை வேண்டி நிற்பர்
அந்த வேளையைக் காண நம் வினைமாலுமே [உள்ளமே]

மாக்கோலம் மறையாத நாட்கோலம் தமிழ்
பாக் கோலம கொண்டதை பாடிடவே வேணும்
கார்கோலம் போலென்றும் ஊர்கோலம்
கண்டாலே நமக்குமே வந்திடும்புதுக்கோலம்(உள்ளமே)

கன்னல் மொழி மாடவர்கள் அங்குமிங்கும்
நதிக்கரையோர் மான்போல நடை
பயின்று-மைவழியும் விழிகளிலே மகிழ்வு
ஒழுக-அந்த மாட்சிமிகு காட்சிகளை
மனதில் வரைவார் [உள்ளமே]

மின்னலென ஒளிபுனையும் வீதிகளிலே
மேளமொடு தாளமோ பண்ணை முந்த
ஒன்றைஒன்று தழுவி வரும் பாங்கு
காணில்-உயர்வென்றும் உரித்தாகும்
திருவல்லிக்கேணிக்கு [உள்ளமே]

பாட்டு 36 கரகரப்பிரியா ராகம் ஆதி தாளம்

பல்லவி

அறம் நெறிமுறைசார்ந்த ஆன்றோரைப் பணிந்துன்னை
அன்புடன் பாட வந்தேன் கேட்டருள்க! [அற]

அனுபல்லவி

பரிவு பாசம் எல்லாம் பார்த்தசாரதியே என்று
பக்தி நலம் மிக்கூற பாடியோர்தமைப் பற்றி [அற]

சரணம்

குருகைப்பிரான் பாட்டில் மகிழ்ந்தது போல்
கோதையின் தாதைபாட குழைந்ததுபோல்
மழிசைப்பிரான் பாட்டில் வளர்ந்தது போல்
மண்டங்குடியின் தொண்டில் மணத்தது போல் [அற]

பேரொளிப் பிழம்பாக பெருகிளனை ஈர்த்த
பெருமானே எந்தன் பேறே பிறப்பறுப்பே
காரொளியாய்த் திகழும் கைரவிணி அரசே
கவின் ஒழுகும் திருக்கோலக் காட்சி எனக்கருள்க [அற]

பாட்டு 37 சுருட்டி ராகம்

பல்லவி

மன்னவன் அல்லிக்கேணி மாயவனைத் தொழ
வாராத நலமெல்லாம் வந்துகூடும் மனமே [மன்]

அனுபல்லவி

பன்நலம் பாரிக்கும் பட்டம் பதவிஎல்லாம்
சீரோடு சிறப்போடு செல்வம் முந்த வருமே! [மன்]

சரணம்

அன்பரும் நண்பரும் அக்கம் பக்கத்தோரும்
எள் எனும் முன்னாலே எண்ணையைத் தருவார்
கண் சிமிட்டும் முன்னாலே கைகட்டி நிற்போரும்
கைரவிணிக் கண்ணன் அருளாக முன்நிற்பர் [மன்]

பாட்டு 38 காநடா இராகம்

பல்லவி

அல்லிக்கேணி வாழும் அற்புதத்தை
ஆரமுதைத் தேனைத் தொழவாரீர் [அல்]

அனுபல்லவி

சொல்லுக்கடங்காத ஒளி வெள்ளம் அங்கு
சூழ்ந்தகன்று பாயுது துதிக்கவாரீர் [அல்]

சரணம்

புளியம் பழம் போல பலபிறப்பு பொலபொலென
வீழ்ந்ததையா அதைவெல்ல
வந்திங்கு கூடிடுவீர் வழி சொல்வேன் ருக்மிணிதாய்
வணங்குகின்ற மலர்பாதம் பற்றிடுவோம்! [அல்]

**பாட்டு 39** **பியாகடை இராகம்**

**பல்லவி**

வருவதெல்லாம் வரட்டும் கவலையில்லை அது
வாழ்வோ தாழ்வோ ஏதும்எனக்கில்லை [வரு]

**அனுபல்லவி**

தருவதெல்லாம் அந்த சாரதியே என்ற
தத்துவத்தில் ஊறிவிட்டேன் நான் என்னே! இன்று [வரு]

**சரணம்**

திருவல்லிக்கேணிக்கு வந்து விட்டேன் என்
தீங்குகள் மாய்ந்ததென்றும் தேர்ந்துவிட்டேன்
பிறகொரு பிணி என்னை சார்பிதென்றால் அந்தப்
பேராளன் சும்மா இருப்பானா! [வரு]

**பாட்டு 40** **மோகனம் இராகம்**

**பல்லவி**

காணும் மலையும் எழிற்காவும் கடலலையும்—காணும்
தோறும் உந்தன் புகழ் கூற!
வானில் உடுக்குகள் தன் வைரமணிப் பந்தலிலே
வரவேற்பு கூறுதோ என்னென்க! [காணும்]

**அனுபல்லவி**

நாலு மறையும் தமிழ்கூறும் வேதங்களும் நாலு
திசையும் வந்துன் அடிபணிய, அந்தக்
காட்சி காணுகிற மாட்சி பெற்ற நான் உன் ஆட்சி
அலங்கார அழகினில் மூழ்கினேன் [காணு]

**சரணம்**

ஊனை மறந்த உயிர் உன் உருவில் கரைந்துருக
தேனை மறந்த வண்டு திரிந்து உழலுதல்போல்
வானை மறந்த பயிர் வாடிக் கருகுவதாய்
நானும் மறந்தேன் எனை நாளும் பொழுதுமாய் [காணும்]

பாட்டு 41 ரதிபதிப்ரியா இராகம்

பல்லவி

கைரவிணி என்றோர் கரையம்மா
காணுந்தொறும் எழிற் கொள்ளையம்மா
வேறு இல்லையம்மா அம்மா [கைர

அனுபல்லவி

ஐயரவில் துயிலும் ஐயனம்மா அவன்
ஆளுகின்ற அரச போகம் அம்மா அது
அரச போகம் அம்மா [கைர]

சரணம்

சூழ்ந்திசை பாடிடும் புட்களிடை நம்மை
தூங்க வைக்க வரும் தென்றல் தாய்
வேங்குழல் நாதமோர் சொர்க்கம், அம்மா தொழ
வேண்டுவதெல்லாம் நம்பக்கம் அம்மா [கைர]

பாட்டு 42 ரஞ்சினி ராகம்

பல்லவி

தோகைமயில் அனைய தோழியீர்காள் உம்
துணைவேண்டியே நானும் தொழுது நின்றேன் [தோகை]

அனுபல்லவி

வாகைசூடும் நல்லா மறவர்குலம் நாங்கள்
வாழவந்தோமிந்த கடற்கரையில் [தோகை]

சரணம் 2

கைரவிணிக் கள்வன் என்றொருவன் மதக்
களிற்றினை போலிருப்பான் எனை அழித்தான்
மெய்யழிந்து போனவிதம் வெட்கமடி அந்த
வேளையிலும் என்னை யவன் விட வில்லையே!
[தோகை]

குன்றனைய பெருந்தோளன் என்னுள் குலவியதைச்
சொன்னேன் மானங்காப்பீர்
பெண் மகவைப் பெற்றோரே! பெரியோரே அந்தப்
பீடுயுடையான் தன்னைப் பிடித்து வாரீர்! [தோகை]

பாட்டு 43 நட்டைக்குறிச்சி ராகம்

பல்லவி

கற்பகக் காவென என் கருத்துள் நிறைந்தவனை ஒரு
கணமேனும் மறந்திடக்கூடுமோடி, தோழி [கற்]

அனுபல்லவி

பொற்பதம் அற்புதம் கற்பதோர் காவியம்
நற்றவர் வரைந்திட்ட நல்லதோர் ஓவியம் [கற்]

சரணம்

திருவல்லிக்கேணியின் திகழ்வோ பொலிவோ செய்
தவம் நிறைந்தவர் தம் சிந்தை மகிழ்வோ!
கருதியவர் கைப் பொருளாய் வந்த அந்த
கைரவிணி கோமளத்தை நான்மறவேன்

பாட்டு 44 சாருகேசி ராகம் ஆதி தாளம்

பல்லவி

வேங்கட கிருஷ்ணனை வேண்டித் தொழுவோர்க்கு
விரைந்து அறிந்து வரும் நலமெல்லாம் [வேங்]

அனுபல்லவி

ஓங்கும் புகழ் கல்வி உன்னதமாம் பதவி
தீங்கில்லா செல்வம் தெய்வீகமாம் துணை [வேங்]

சரணம்

வண்ணக்கிளியாய் ஒரு மனைவி நலங்காப்பாள்
சின்னஞ்சிறுசுகளே தேர்ந்திடும் பலகலையும்
நண்பர்களோ நாளும் நலஞ்செய்ய முன்நிற்பார்
என்ன வேண்டும் இனி என்றே நாமிருப்போம்

பாட்டு 45 அவதாரமகிமை விருத்தம்

பூபாளம்

விரிந்த கடல் அலைதழுவி மேனி எல்லாம் தண்மையுற
திரிந்து அலைந்து வருகின்ற தென்றலெனும் பூந்துகிலே நீ
அள்ளி வந்த நறுமணங்கள் அத்தனையும் தெருவிரித்தாய்
அல்லிக் கேணியானின் அழகான பவனிக்கே!

பாட்டு 46

கார் குழலார் கைரவிணி மங்கை நல்லார்
கைதொழுது மயங்கி நிற்கும், கருமா முகிலே
பாரதத்தை நடத்தி வெற்றி பாண்டவர்க்கே தந்த மூர்த்தி
சீர் பரவ ஆசை கொண்டேன் செய்க என அருளுதியே!

பாட்டு 47 சகானா ராகம்

வாட்கண்ணார் தனை ஈர்க்கும் வடிவினை உடையநம்பி
போர்க்கென்று கொண்ட கோலப் பொலிவினிலே
எனை ஈர்த்தாய்
தார்புரளும் நெஞ்செனனை தருணம் அருளிவிட
பேர்மணக்கும் உன் புகழில் ஊர் குளிக்கச் செய்திடுவேன்

பாட்டு 48

தேர்முனையில் நண்பனுக்கு செய் அறமே என்றவனே
ஓர் முனையில் உலகுய்ய உயர்ந்த வழி சொன்னவனே
பேரதனை ஆயிரமாய் பெற்றாய் நீ என்றாலும்
சாரதியே என்று மனம் சாற்றிடவே கற்றதப்பா!

பாட்டு 49 காம்போதி ராகம்

குன்றெடுத்து குலங் காத்த கோவலனே மணிவண்ணா
இன்றிந்த ஏழைக்கு இரங்கி நீ எழுந்து வாராய்
அன்று நீ கொண்டெடர் பொளிர்ந்த அவதார மாண்பை
எல்லாம்
நன்றாக நாள் பாட நாரணனே வாழ்த்திடுவாய்

பாட்டு 50

பாதளத்தில் நால்வேதம் பாதகராற் சிறை இருக்கும்
வேதனையைத் தாளாமல் வித்தகனே மீன் ஆனாய்
ஆதரவாய் அமரருக்காய் அவுணரொடு கடல் கடைய
ஆமையென மலைதாங்கி அறம்வெல்ல ஊனை ஈந்தாய்

பாட்டு 51 பைரவி ராகம்

மிடைந்த இடரிடையே நீ மெய்வருத்தி அறங்காக்க
அடைந்த அமுததனை யார் உண்பது என்றொரு போர்
தொடர்ந்தங்கு தோன்றிடவே தொடர்மின்னற்பாராய் நீ
அடர்ந்தங்கு அமுதளித்த அழகை இங்கு பொழிகுவையே!

பாட்டு 52

மின்னொளி சேர் கரிய மேகம் விரைந்துருண்டு
வேதமதே வடிவமாகி நிற்பதே போல்
மண்மகளைக் காத்திடவே வராகமான உன்
மாண்பதனை யெண்ணி உள்ளம் மகிழ்தப்ப!

பாட்டு 53 காப்பி ராகம்

சாதித்தான் அபணர்குல நல்லோன் அன்று
சாதித்தான் நாரணனே என் நாபொழியும் என்று
சோதித்த அரக்கனை ஓர் தூணுக வந்து
சேதித்த சிங்கமதை சிந்தையே நீ வணங்கு

பாட்டு 54

முக்குணத்தின் முதல்குணமோர் வடிவமெய்தி பிறர்
மோகிக்க அடிபெயர்த்து வருதல் போல
வக்கணையாய் மாவலியின் வேள்வி கண்டு
வாமனனே அவன் செருக்கு அடக்கினுயே!

பாட்டு 55 குறிஞ்சி இராகம்

இராமாவதாரங்கள் நிறைய என்பர் அதிலென்
நன்நெஞ்சு கொண்டது ஒன்றே அப்பா
தாமாக வந்தவர்க்கு சரண் அளிக்கும்
ஜானகி நாயகனே என் தலைவனப்பா!

பாட்டு 56

மரகத மா முகிலோர் சோலைபுக்கு மதுரக்குழலூதி இன்பங்கூட்ட
கிறங்கினவே உயிர்களெல்லாம் கீழ்மேலாக
கிருஷ்ணவதாரத்தின் அறங்களீதோ தனை ஈந்து தான்ஈர்க்கும்
தாமோதர நம்பீ! எனையீர்க்கும் திறமுனக்குஇருந்தக்கால் வெல்!

### பாட்டு 57

கௌரிமனோகரியின் தாள் பணிந்து அருள்
கேட்டு வந்தேன் உன்னைப் பாடுதற்கே

ஆனந்த பைரவியோ ஆகட்டும் என்றாள்
ஆசையுடன் நானும் ஓடி வர

அப்போழ்து அழைத்தாளே அந்தக் கல்யாணி
அண்ணனுக்கு பிடிப்பது தமிழ்தான் என்றான்

என்னமோ கனம் ஏற இங்கு வந்தேன்
எழிலாக நீயும் காட்சி தந்தாய்

நம்பி லஹரியில் நான் வீழ்ந்தேன்
நாடும் பக்கமெல்லாம் நீ இருந்தாய்

கானடா எண்திசையும் எனையென்று
காட்சி தந்த மாட்சியதை என்னென்பேன்.

மத்தியமாய் வதிக்கும் உயிர்களெல்லாம் உன்
மாணெழில்சேர் கோலத்தின் தொகுப்பு என்றாய்

சீராக அதைப் பாட அருளுவையே
சிரீதரனே சேவகனே சேவித்தேன்

பூபாளா எனக்கொரு வரமருள்வாய் என்
பொழுதை உந்தன் திருவடியில் சேர்ப்பதற்கே

### பாட்டு 58 கேதார கௌளை ராகம்

#### பல்லவி

கோடிக் கதிர்கூடி கொல்லென மலர்ந்தது போற் நீ
ஆடிக் களிக்கும் அழகை என்னென்பேன்! [கோடி]

#### அனுபல்லவி

தாவி உனை அணைத்து தழுவத் துடிக்கும் நெஞ்சம்
ஆடி துடிக்கும் வரை உன் அருள் வேண்டுமே (கோடி)

#### சரணம்

திருவல்லிக்கேணியின் தெய்வீகத் திரட்சியெல்லாம்
திரண்டுருண்டு முதிர்ந்ததோரு பேரெழிலாய்
மருவியே நான் வணங்க வந்ததோர் அற்புதம் போற்
மாணிக்க சுடர்போல மிளிருதம்மா (கோடி)

பாட்டு 59 கம்பீர நாட்டை ராகம் ஆதி தாளம்

பல்லவி

எழுந்தருள்வான் என் ஐயன்
யாவரையும் தேவரையும் தீனரையும் காக்கவே (எழுந்)

அநுபல்லவி

திருவல்லிக்கேணியிலே சித்திரைத் திரு நாளதிலே
தினமொரு கோலத்தில் சிருங்காரமாகவே (எழுந்)

சரணம்

கோமளச் செவ்வாயின் சிரிப்பழகும் அத்தக்
கோவலன் திருமார்பு அணியழகும்
தேன்கமழ் மலர்மாலைத் தோளழகும் காண
தெரிவையர் முந்துகின்ற பேரழகும் கொண்டு (எழுந்)

சதுர்மறை சாஸ்திரம் சடகோபன் தீந்தமிழ்
எதிர்படுவோரையெல்லாம் ஈர்த்திடும் எக்காளம்
ஒய்யார நடையும் அந்தஊர் கோலமும் காண
மெய்யாகவே தவம் மேவிட வேண்டும் அம்மா (எழுந்)

பாட்டு 60 முகாரி இராகம்

பல்லவி

சொத்தென்ன சுகமென்ன தோரணைகள் இருந்தென்ன
ஐயா உன்னழகில் ஆழும் மகிழ்வின்றி (சொத்)

அநுபல்லவி

தித்திக்குமே சிந்தை திருவல்லிகேணியெனில்
அத்திக்கை தொழுதிட அருகாதோ, யம பயம் (சொத்)

சரணம்

வித்தை பல கற்றாலும் வீரதீரம் மிகுந்தாலும்
வீழ்ந்திடும் பலபிறப்பு மரம் விட்டபழம் போல
கத்தி கதறி நாம் கைரவிணியானே! என்றால்,
போகும் கதிக்கு, முன் போவான் பயமில்லை (சொத்)

பாட்டு 61 தன்யாசி ராகம்

பல்லவி

ஞானமில்லேன் உன்னை நம்பி வந்தேன் என்றால்
நாரணனே உனக்கது நன்கு தெரியும் ஐயா! [ஞான]

அநுபல்லவி

பூரணனே பூரணத்தூள் பொலிந்திடும் பொலிவே, எக்
காரணத்தும் நீ என்னை கைவிட மாட்டாய் என்று [ஞான]

சரணம்

பார்த்தனுக்கு சாரதியே பாவைருக்மிணி கேள்வா
கேள் வா எனது கேவல் முறையீடு
பார்த்து அருள்புரிய என்பாவம் விடவில்லையோ!
தீர்த்தனே தீர்ப்பாய் யெந்தன் தீவினை சாபமெல்லாம் [ஞான]

62 பாட்டு தர்பார் ராகம்

பல்லவி

தர்பாரில் வந்து தொழுதேன் முப்பாரும் ஆளும்
அப்பா என் குறைகளையா! [தர்]

அநுபல்லவி

அப்பாலுக்கப்பால் நின்று ஆளும் அரசர் எல்லாம்
தப்பாமல் வந்து உன்னை தண்டனிட்டு திறை செலுத்தும் [தர்]

சரணம்

கைப்பரர் யாருமில்லா கைரவிணி அரசே
ஒப்பார் யார் உளரோ உன் அருளுக்கிணையாக
எப்பாரும் தப்பாமல் நீ இன்னும் ஆள வேணுமைய்யா
அப்பொழுது தான் தீரும் அடியவர் துயரெல்லாம் [தர்]

பாட்டு 63 பூரிகல்யாணி ஆதி தாளம்

பல்லவி

சிந்தையைப் பரிகொடுத்தேன் திருவல்லிக்கேணி நாதன்
சேவடி அழகிலென் சிந்தையைப்பரிகொடுத்தேன் [சிந்தையை]

அநுபல்லவி

வித்தையடி வேதன் விரிமலர் தாளிணையில்
விண்ணும் மண்ணும் ஒன்றாய் விரித்த கோலங்கண்டே
[சிந்தையை]

சரணம்

மாவலி வேள்வியிலே மூவடிமண் கேட்ட
சீரடிச் செம்மையுள் திகழ்ந்தது ஓருலகு கண்டேன்
ஏவல் அங்கில்லையடி எல்லாரும் தம்மையாள்வார்
தம்மையாள்வார் தமக்கு அவன்தானே உலகு [சிந்தையை]

பாட்டு 64 சாரங்கா ராகம் தாளம் திஸ்ரம் ராகம்

பல்லவி

அத்திருபுர வீதியிலே அரிநடையில் கண்ணன் வருகையிலே
யாரடி கண்டார் நீ சொல்லு அத்தனை ததும்பு அவன்
முகத்தினிலே [அத்

அநுபல்லவி

கண் கொண்டு சுட்டாரோ கைகொண்டு பட்டாரோ
கமலத் திருமுக வதனத்திலே
பெண்ணினம் விட்ட பெருமூச்சின் வடுக்களோ
பேதையே மருந்தங்கு இல்லையோடி [அத்]

சரணம்

பாரதம் வென்ற பரிசாக வந்ததோ பக்தர்கள்
பட்டதுயரால் வெடித்ததோ
யாரதன் காரணம் ஆற்றிடப் போமோடி
அதுவும் அவனுக்கோர் அழகானதே
மாரத விசயன் மனம் விட்ட வேளையில்
மறையொன்று செப்பிய மாண்பின் வியர்வையே
தார்மீக நெஞ்சதுத் ததும்பும் முகிழ்வெனச்
சதுர் மறைபோற்றும் சாரதி முகத்தினில் [அத்]

பாட்டு 65 சரணங்கள்

உன்னையே நினைந்தேன் சாரதி
உயர்வே தருவாய் சாரதி

என்னை அளித்தேன் சாரதி
ஏற்பாய் நிவேதனம் சாரதி

அன்பே அருளே சாரதி
அமுதே திருவே சாரதி

குணநலக் கொழுந்தே சாரதி
கோமளச் ச்யாமள சாரதி

கீதை நாதனே சாரதி
கீதங்கள் போற்றும் சாரதி

வேத முதல்வனே சாரதி
விமல கமலனே சாரதி

யாதும் பற்றினோம் சாரதி
பாதகம் களைவாய் சாரதி

ஓதக் கடலோரம் சாரதி
ஓம் என நின்றாய் சாரதே!

ஞானமணி போன்று சாரதே
நினைவில் ஒளிருவாய் சாரதே!

கான மிசைத்து வந்தோம் சாரதே
கண்டு எமை வாழ்த்தும் சாரதே

பாட்டு 66 புன்னாகவராளி ராகம் கண்டஜம்பை தாளம்

பல்லவி

சரணடைந்தேன் சாரதி என்னை தருணமுடன் ஆதரி [சர]

அனுபல்லவி

இருளினில் வீழ்ந்து நான் இடரிய போழ்தெல்லாம்
அருளொடு துணை நின்று ஆதரித்தது போல [சர]

சரணம்

வறுமையின் சிறுமையில் வாடிய போழ்தெல்லாம்
வந்துதவி துயர் தீர்த்த மாண்புக்கு வாழ்த்துகிறேன்
கருணையின் கனிவை இந்தக் காசினிவாழ் உயிர்க்கும்
காட்டிடுவாய் ஐயா! கைரவிணி நாதா! [சர]

பாட்டு 67 பைரவி ராகம் ஆதி தாளம்

பல்லவி

எத்தனையோ பணிகளிலே என்னோடு துணை நின்றாய்
என்ன செய்வேன் நான் அதற்கு கைமாறு [எத்]

அனுபல்லவி

அத்தனை பணிகளிலும் ஆகா ஓகோ என்னும்படி
அளித்தாயே எனக்கொரு நற்பேறு [எத்]

சரணம்

வித்தகனே விழவரா அல்லிக்கேணி நாயகனே
அனைத்திலும் அனைத்தாக அமர்ந்து ஒளிர்பவனே!
தந்துவமே உந்தனுக்கு தானேது பிரித்தது
மொத்தமுமே நீ செய்யும் தொழிலல்லவா [எத்]

பாட்டு 68 அசாவேரி ராகம் ஆதி தான சம எடுப்பு

பல்லவி

வா வா மனமே நீ மாவல்லிக்கேணிக்கு
வாஸுதேவ மைந்தன் வண்ணக் கொலுக்காண [வா]

அநுபல்லவி

தா தா நீ நாள்தொறும் தானே கரைந்துருகி
ஏற்றிய போற்றல் எழுத்துகளைச் சொல்ல, அவனிடம் [வா]

சரணம்

ஓதாது அவன் புகழை ஒருநாள் கழிந்ததா சொல்
ஏதானும் நாம் செய்ய அவனை என்ணுதிருந்ததுண்டா
பேதாய் பின் ஏன் நீ பிழையில் உழல்கின்றுய், விரைந்து
வாராய் அவனிடம் போய் வாழ்த்துகளைப் பெறுவோம் [வா]

பாட்டு 69 சாவேரி இராகம்

பல்லவி

கோவில் தெரியுதம்மா அந்தக் கோவலன்
ருக்மிணி நாயகன் தன் [கோவில்]

அநுபல்லவி

பாபம் தொலையுதம்மா அவன் பாதம் தொழுபவர்
பார்ப்பவர் அனைவர்தம் [பாபம்]

சரணம்

காண் எனக் கூறுதமமா அவனைக் கருதி
கருதி கரைந்திட்ட நெஞ்சம்
கணகள் குளிர்ந்ததம்மா அந்தக்
கைரவிணிக் கரை நேர்த்தியைக் கண்டு [கண்]
ஓம் என ஒலிக்குதம்மா அவனை
உணர்பவர் ஓதுபவர் அனைவரின் செவிதனில்
தாமதம் இனி ஏனோ அந்த சாத்திர
வாசலில் தோத்திரம் சொல்லிட, தாமதம்

பாட்டு 70 தோடி ராகம் கண்டஜம்பை தாளம்

பல்லவி

முப்பத்து முக்கோடி தேவர்களும் அசுரர்களும்
வந்து நின்றார் மாவல்லிக்கேணி கேணிநகர் வாயிலிலே [முப்

அநுபல்லவி

அற்புதத்தின் அற்புதமாய் ருக்மிணி நாயகனின்
அலங்காரத் திருச்சேவை அகங்குளிர காணஎன்றே [முப்

சரணங்கள்

கற்பனையிலும் காணு கரியதிருமேனியெழில்
கனகமணி அணிபுரள கனிந்த அன்பின் மாண்புடனே
கற்பகமாய் கார்எழிலாய் காட்சிதரும் மாட்சியதை
கண்டுதாழும் உய்ந்திடவே கருணையதைப் பருகிடவே [முப்

மரகதப் பச்சையதை வடிவமைத்து இருமருங்கும்
மாணிக்க வைரமுத்தை வரிசையுற அணிநீட்டி
அறமதுவே தானாக அமைந்த திருக்கோலமதை
அங்கெங்கும் காணுமல் ஆசையுடன் இங்கு வந்தார் [முப்

போது அலமர்ந்த முகம்
பொழுது விடியும் எழில்
தாது பிலிற்றும் சுவை
தானுக நின்றனே

ஏது இவன் போலொரு
தெய்வம் இப்புவிதனில்
என்னும் வண்ணம் நமக்கு
இன்பந் தருவானே

விண்ணில் பவனி வந்து
தன்னில் நிறைவு கொள்ளும்
மன்னன் துதிக்க வந்தார்
மகிழ்வு நமதாச்சு

பண்ணில் கனியும் சொல்
மண்ணில் வளர்வது போல்
புண்ணியம் என்ன செய்தோம்
அமுத போகத்தைத் துய்ப்பதற்கே [முப்

பாட்டு 71 தோடி ராகம் ஆதி தாளம்

பல்லவி

பார்த்துப் பார்த்துக் கொள்ளைப் பரவசமுற்றது காண்
பார்த்த சாரதே என்னுள்ளம் உன்னை (பார்

அனுபல்லவி

சேர்த்துச் சேர்த்து தேவி ருக்மிணியுடன்
சீரும் சிறப்பொளிர சிருங்காரமாகவே (பார்

சரணம்

ஆர்த்த என் நெஞ்சம் உன் அருமை பெருமைகளை
சேர்த்து வைத்து அதைத் தினமும் பருகியதால்
ஈர்த்து வருகுதைய்ய இனிய தமிழ்மாலை
சாத்திக் கொள்வாய் அதை சந்தோஷம் அதற்காக (பார்

பாட்டு 72 தோடி ராகம் மிஸ்ரசாபு தாளம்

பல்லவி

எல்லாம் உன் அருள் என்று எண்ணி இருக்கு மாண்பை
எனக்கும் அருளுவாய் ஈசா
எழிலார் அல்லிக்கேணி வாச
ஏழைஎளியவர்தம் நேசா ஸ்ரீனிவாசா (எல்

அனுபல்லவி

வல்லார்க்கு வல்லாரும் மாய்வார் ஒருநாளில்
மறைகள் இங்ஙனம் கூறமனமேன் மயங்குதப்பா
எல்லார்க்கும் நல்லானே இருளைக் கடிவாய் நீ
இருளைக் கடிந்து விட்டால் இதயம் உனதாகுமப்பா (எல்

சரணம்

சொல்வாரும் துதிப்பாரும் தொழுதாரும் அழுதாரும்
சொன்னது ஒன்றேதான் உன்துணையே நிலைஎன்று
கல்லான் ஒரு கதி இல்லான் கலங்கிதவிக்கின்றேன்
கைரவிணி வாழ்வே கருணையுடன் எனைப் பாரேன் (எல்

பாட்டு 73 தோடி ராகம் சதுஸ்ர ஏக தாளம்

பல்லவி

தேனுய் மறை நம்செவியைக் குளிர்விக்கும்
திருவல்லிக்கேணி செல்லுவோம் சேர்ந்தே வாராய் நெஞ்சே
[தேனு]

அனுபல்லவி

வானோர் தொழுவர்நாளும், வருவார் அணிஅணியாய்
தனேரில்லாத் தலைவன் தாமரையாள்கொழுநனைக்காண [தேனு

சரணம்

கானஞ் செய்தே நாரதன் காணிக்கை தந்திடுவான்
பானமதை இந்திரன் பரிசாகத் தந்திடுவான்
வீணை இசையில் மூழ்கி வித்தை மகள் துதிப்பாள்
ஏன் என்ன என அதிர இளையள் கற்பகம் விரைவாள் [தேனு

மானுர் விழிகனிய மாதாருக்மிணித்தாய்
போதாக மலர்ந்து பூரிப்பாள் இவைகண்டு
தேனுள் திரௌபதித்தாய் சிந்தை நெகிழ வந்து
பாரதப் போர் வென்றமைக்கு பாராட்டுகள் சொல்லாள்
[தேனு

பாட்டு 74 தோடி இராகம் ஆதிதாளம்

பல்லவி

தோடியிலே பாடி தொழுது நின்றேன்
கோடிப்பேர் நடுவே என்குரல் கேட்கவேணுமென்று [தோடி

அனுபல்லவி

தேடித் தேவர்கூவும் தினகர வாயிலிலே
சிறியேன் அறியேன் சொல் திருச்செவி சாத்திடவே [தோடி

சரணங்கள்

ஓடிவந்தார் ஊர்தியிலே ஊரின் மிகச்செல்வயுரல்லாம்
நாடி உன் நலம் கூற நான்மறையாளர் வந்தார்
கூடி விழிசுழற்றி உன்னைக் கொள்ளையிடப் பார்க்கும்
சேடியர்கள் ஒருபக்கம் சிற்றிடையைபல்லக்குசெய்தார் [தோடி

ஆடுஞ்சுடராய் நீ ஆங்கொளிரக் காண்கையிலே
காடி அலைந்தவன் கண் கதி வேண்டி கசிந்ததப்பா
வாடி வறுமையிலே வையம் அழிந்திடமால்
நாளும் காப்பவனே நானுக்கோர் பாரமா! [தோடி

பாட்டு 75 குந்தலவராளி ராகம்

கருணை நெஞ்சமதின் கதவுகள் என்னைக்
கண்டதும் மூடிக் கொண்டதுவோ
அருளைப் பொழியும் இருவிழிமலர்கள்
அடியேனை மறந்தும் சுழன்றதுவோ!

தருணமறிந்து அன்பர் துயரகற்றும் கரம்
தவித்திடும் எனையேன் தழுவவில்லை
திருவல்லிக்கேணிவாழ் தேனுர் அமுதே
திரும்பி எனை ஏன் பார்க்கவில்லை!

நீரார்ந்த கடல் நித்தம் நிர்மல அடிவருடும்
பேரார்ந்த பதிவாழும் பெருமானே
சீரார்ந்த கருணை என் திறமாய்ந்தால்
அழகாமோ, தீருமோ எளியேனின் வல்வினைகள்!

பாட்டு 76 ஜோன்மபுரி ராகம்

பல்லவி

ஊருக்கோர் அழகுண்டு அதன் பேருக்கோர் அழகுண்டு
சீருக்கோர் அழகுண்டு திருவல்லிக்கேணி என்னும் [ஊரு]

அனுபல்லவி

பாருக்கோர் அழகுண்டு பார்த்தசாரதி என்றால்
யாருக்கும் அழகுண்டு அவனடி சேர்ந்திட்டாலே [ஊரு]

சரணங்கள்

கூறிடும் வேதக் குணநலப் பேரருள்
ஒருவாய் அங்கே ஒளிசெய்யக் கண்டபின்
ஊறிடும் அன்பில் உருகுது நெஞ்சம்
வேறிடம் நமக்கில்லை வியத்தகு பதியன்றி [ஊரு]

போரிட்ட கோலப் பொலிவுடன் கண்ணன்
மீறிட்ட அரசை வீழ்த்திய பெருமையில்
தேர் விட்டிறங்கிய திருப்பதி இதுவன்றே
சேர்ந்திட்டோம் இங்கு தீவினை இனி இல்லை [ஊரு]

பாட்டு 77 நாத நாமக்கிரியா ராகம்

உருகிக் கரைந்துள்ளம் உன்னடியே தேடி
ஓடி வருகுதையா
திருவல்லிக்கேணியின் திசைநோக்கியே அது
தினமும் தொழுகுதையா

கரைதழுவும் கடற்காட்சியைக் கண்டுமே
கலங்கி கரையுதையா
துரையவன் ருக்மிணி துணையவன் சோதனை
தீருமோ என்குதையா

கைரவிணி என்று காதில் விழ அவர்
காலடி பற்றுதம்மா
பைய, யாரும் பார்த்தசாரதி என்றால்
பார்த்து பின் ஓடியே தேடுதம்மா!

நைய்யும் நினைவாலே நலிந்து குலைந்துமே
நாராகிப் போன நெஞ்சு
நாயகன் சாற்றிடும் துழாய்மலர் மாலைக்கு
நாராவேன் என்றேதுள்ளுதம்மா

சூழ்ந்த இருளிலே சுடர் மாமணியாய்
சோதியைக் கண்டதையா அதன்
தோற்றத்தைத் தொடரைச்சூழ்ஒளிக்
கதிரை தொடர்ந்தே விரைகுதம்மா!

ஆழி சூழ்புவியில் அல்லிக்கேணியொன்றே
ஆநந்த நிலையம் என்குதம்மா அதை
அடைந்த பெருமையில் எமபயமில்லை ஒன்று
இருமாந்து சொல்லுதம்மா!

பாட்டு 78 ஆனந்தபைரவி ராகம்

பல்லவி

எத்தனை தரம் உன்னை எண்ணிதுதித்தாலும்
இரங்கவில்லையே உன்மனம் என்ன செய்குவேன் [எத்

அனுபல்லவி

வித்தை இனி எங்குகற்பேன் உன்னை மேவி வளைந்திடவே
கத்தும் கடலெல்லை வாழும் கைரவிணி அரசே! [எத்

சரணம்

கீதையதைத் தந்துலகைக் கீர்த்தியிலே சேர்த்தவனே அந்தப்
பாதையிலே நான்வர பணித்திடும் சாரதியே
பேதையென உடல் சுமந்து பீழையிறவாழுகின்ற
போதையை அகற்றும் உம்புகழ்தனிலே கூட்டும் [எத்

பாட்டு 79 சிந்துபைரவி ராகம்

சித்தம் உருகி உந்தன் சீரடியை உன்னி
தினமும் கரையுதைய்யா
கத்தும் கடல் எல்லை வாழ்கின்ற ஐயனே
காதில் விழவில்லையா!

சாரதே என்று நான் சாற்றும் குரல்
ஓலைச்சருகாகிப் போனதுவோ
பார்த்தும் பராமுகமாயிருத்தல் எந்தன்
பாபத்தின் விலையாகுமோ!

தொல்லைபல சூழ்ந்து தொடர விரட்டியென்னை
துன்பப்படுத்துதைய்யா!
அல்லிக்கேணி வாழும் ஐயனே நீ என்னை
ஆளுவதெப்போ ஐயா!

அருள் சொரியும் இருவிழியும் முகமும் கண்டு
அடிமையானேன் ஐயா
மருள் செறிந்த வைய வாழ்வதனை வெல்ல
மலரடி தருவாய் ஐயா!

சரணம்

கீதையின் நாயகனே கிரிதர கோபாலா
நாதமானவனே எங்கும்
நான் என ஒளிர்பவனே வேதமானவனே
எம்வேதனை மாளாதோ [கீதை

ஏழையென என்றொருவன் இங்கு
இருந்திடல் அவசியம் போல்
வாழையடி வாழையென நான் உன்னை
வாழ்த்துகிற குலம்அப்பா [கீதை

பாட்டு 80 பைரவி இராகம்

பைரவி தமையன் பார்த்தசாரதிக்கு
சாய ரட்சை பூஜையிப்போ தரிசிப்போம்

கைரவிணிக் கரையில் கவிந்த அந்திவானச் செம்மை
கார் குழலார் முகம்போல விரிந்ததம்மா

மெய்யுருகிக் கரைய விரைந்தகரம் சிரம்அணைய
விதிர்த்தலர்ந்த அன்பரெல்லாம் விழிசோர்ந்தார்

விழித்திரையில் விளையாடும் விமலனவன்
எழிற்கோலம் மொழிய ஒரு மொழி

உண்டோ முகர்ந்தவரே மணமறிவார்
மணமறிந்தார் தமைவாழ்த்தி அவன்

மாட்சி இன்னும் கூறிடவே
மனத்துள்ளே ஓர் பயணம் தொடங்கலுற்றேன்

வாழிய வாழிய சாரதி
வாழ்க வாழ்க ருக்மிணித்தாய்
வாழ்க வாழ்க மாமறைகள்
மாறன் தமிழாய் வாழியவே!

பாட்டு 81 காம்போதி ராகம்

பல்லவி

பார்த்தசாரதி பவனிவரும் காட்சி
பார்க்கக் கொடுத்து வைக்க வேணுமே
அதைப் பாட்டில் எழுதி வைக்க தோணுமே [பார்

அனுபல்லவி

ஆர்க்கும் மணித்திரள் அழகிலெழும் சாரதியை
அன்று கண்டார் அன்றே வென்ருர் ஆபத்தைவிளைகளை [பார்

சரணங்கள்

கண்ணிரண்டும் போதுமோ அந்தக் கவின் வரும் எழிற்காண
பண்ணிய புண்ணியமும் பக்கத்தில் நின்றிடுமோ
எண்ணரிய கலையெல்லாம் இயம்பியதோர் அற்புதத்தை
அல்லிக்கேணியில் கண்டார் அமரர் உளகாள்வாரே! [பார்

தோள் கண்டார் தாள்கண்டார் சுடர்முடி ஒளிகண்டார்
வாள் மின்னற் போல பலவைரநகை மார்பில் கண்டார்
சாமந்தி கஸதூரி சண்பக மாலையுடன் தண்
துழாய் மாலையொன்றும் தரிசனம் தரக்கண்டார்

பாட்டு 82 மோகன ராகம் ஆதி தாளம்

பல்லவி

என்ன கருணை ஐயா இந்த ஏழைமீது
உனக் கென்ன கருணை ஐயா

ஏற்றமிகும் திருஅல்லிக்கேணி
யிலே-போற்றிபலர் தொழலே
வீற்றிருக்கும் உனக்கு [என்ன

அனுபல்லவி

பண்டு செய்த தவமும் இல்லேன் சிறு
பள்ளிதந்த கல்வி இல்லேன் ஒரு
தொண்டு செய்தும் நானறியேன்
துன்பமல்லாற் பிறிதறியேன்

பொருளைத் தேடி நிதம் புலம்பித
திரிந்தலைந்து உனதருளை மறந்து
வீண் அல்லற் பட்ட என்பால் [என்

சரணம்

பஞ்சவர்கள் பாற் கொண்ட பாசமிகு நட்பும்
பாலூட்டும் தாய்காட்டும் அன்பும் அமைவும

பஞ்சை யென்பரற் கொண்டனையே
பார்த்தனுக்கு சாரதியே
நன்றியென்ன நான் செய்வேன்
தங்கை ருக்மணி கேள்வா

எண்ணி எண்ணி மனம்
இளகிக் கரைந்துமே
கண்ணீர் விட்டலறி
கைகூப்புவதல்லால் [என்ன

பாட்டு 83 ஹரிகாம்போதி ராகம் திஸ்ரருபக தாளம்

பல்லவி

ஆநிரை மேய்த்து அயர்ந்த கண்ணன்
அல்லிக்கேணி வந்தானே [ஆநிரை

அனுபல்லவி

தான் அலைந்த கலைப்புத்தீர கடற்
கரைதனில் காற்று வாங்கி

சரணம்

பூநிகராய் பொலிந்த மேனி புழுதிஏறஎழிலை மாந்தி
பாப் புனைவை அணிய என்றே பாங்குறவேஇங்குவத்ததுபோற்
யாப்பணியில் அமைந்த பாட்டாய் அன்னைருக்மிணிஅங்கிருக்க
கோப்புறசவ வந்து நிற்கும் கோலமதை என்ன சொல்ல
[ஆநிரை

பாட்டு 84 பெஹாக் ராகம்

பல்லவி

சாரதி கை சாட்டையிலே அண்ட
சராச்சரம் சுழலும் மார்க்கமென்ன [சாரதி

அனுபல்லவி

பூரதத்திலேறி அவன் புவனமெல்லாம் சுற்றி
பொதுமையில் அரசாளும் மார்க்கமே அவன் மார்க்கம்
[சாரதி

சரணம்

கடமையே முதல் என்ற கண்ணன் அல்லவா அவன்றோ
உடமைகள் பிறகென்னும் உண்மையையும் சொன்னான்
தடைபல வந்தாலும் தயங்காத கடமை
உடைபட முடியாது என்று உறுதிபடச் சொன்னான் [சாரதி

85 பாட்டு சாமா ராகம் ஆதி தாளம்

பல்லவி

வினையேன் என்செய்வேன் உனைவேண்டித் தொழுவதல்லால்
தொழுதேன் துணையென்று ருக்மிணியின் துரையே கண்
பாராய் [வினை

அனுபல்லவி

திண்தோள் மணிவண்ணா திருஅல்லிக்கேணி ஐயா
விண்ணோர் பரவ நிற்கும் வேதவித்தகா கண்பாராய் [வினை

சரணம்

தஞ்சமந்த பஞ்சவர்கே தந்ததினால் கருணை
மிஞ்சவில்லையோ இந்த மேதினியைக் காப்பதற்கு
வஞ்சம பிணி பசி பாவம் வல்அரக்கர் போலுலகை
வாட்டுதைய்யா நீயும் மறுபடிசங்குஊது [வினை

பாட்டு 86 சாமா ராகம் சதுஸ்ரம் ஏகதாளம்

தத்தை தக திமி தாம் தோம் தீம் என
நடமாடும் குழந்தை வருக
காளிங்கன் தலையில்
நர்த்தனம் செய் கண்ணன் அருள்க
தகிட தகிட தோம் தாம் தோம் தீமெனஎன்
தடமாரபில் ஆடவருகை
ஆயர் கொழுந்து தாள
சுருதி ஜதி குலுங்க
குழலூதி கோபியர் தம்குழல் வருடும் கோவல
கோமளச் சியமளன் வருக
திருவடியில் கொஞ்சும்
அணிகள் முரல
நவநீதம் அளைந்துண்ட நளினும்புஜக்கரத்தில்
நவரசம் கொண்டுத் தருக
நந்த முகுந்தன் ரமணீய
நகை பொழிய
குஞ்சம் தொடுத்து கருங்குழல் நீவிப்பூ முடித்து ஒளி
மிஞ்சும் அணிபுனைவை
மேனிஎழிலில் விட்டு கொஞ்சும் யசோதை காண்க!
ஏழையர் தம் பஞ்சம் துடைக்கச் சொல்லுக
வண்ண நிலா மாடமாருதம் ஊர்மஞ்சத்தே, மேனி
வருடும் ருக்மிணித்தாய் கூறுக,
மாவல்லிக்கேணி மகராசன்
சேவைதருக!

பாட்டு 87 இங்தோள ராகம் ஆதி தாளம்

பல்லவி

சங்கொலித்திடு சங்கொலித்திடுக
சதுர்மறை வகுத்தீந்த சரோஜக் கனிவாய் [சங்

அனுபல்லவி

அங்ககங்கெஞதபடி ஆநந்தம் நிறைக
அமைதிபெருகி எங்கும் அறம் உயர்ந்திடுக! [சங்

சரணம்

தங்க ஒளிசேர் பங்கயத்தாள் மணிவாளன்
சாரதி இச்புவியை அருள் ஆழ்த்தி
இன்பபுறச் செய்திடவே வேண்டும் என்று
இறைஞ்சிடுவோம் அவனை ஏற்றிடுவோம் தமிழால் [சங்

பாட்டு 68 பன்னு மெட்டு ஆதி தாளம்

பார் புகழ் நாயகன் பார்த்தசாரதி வாழிய
நான்றாக இந்த வையகம் சுகமாக
தேர் அன்று செலுத்திய திறமின்று கூடிட
சீர்மிகப் பரவிடவே தீமைகள் ஒழிந்திடவே

தூது நடந்திட்ட தூமலர் சேவடி தொடரட்டும்
ஓர் பயணம்
சூதுகள் மாய்ந்தெங்கும் துலங்கட்டும் புத்தொளி
சூழ்வோம் அவன் சரணம்

வறுமையைச் சிறுமையை வஞ்சப் பேய்களை
வலுவுடன் அவன் தாக்க
வாழ்த்துக்கள் முலங்கிட வண்ணச் சங்கம்
அவன் வாயினை முத்தமிட

கொடுமைகள் பொடிபட குலநலம் விளங்கிட
ஒரு குருஷேத்திரப் போர் நடக்கட்டுமே
வடிவழகொளிர் விடும் ருக்மிணி நாயகன்
மறுபடி கீதையை ஓதட்டுமே

சூதொடு வாதும் சோதத் திறனும் தொலையட்டும்
முடிவாக அந்தச்
சுந்திரன் ஏந்திய சக்கரம் மீண்டும்
சுழலட்டும் வலமாக

கைரவிணிக் கரைகண்டதோர்மாணை
பூில்காசினி எல்லைக்கும் பரவட்டுமே
ஐயன் ருக்மிணி அமுதின் அமுதன் ஆளட்டும்
நம்மை மகிழ்வாக

அல்லிக்கேணியில் "அழகுவீதியில் அவன்அடியவர்
அடிபடும் கற்றூளாய்
எல்லையில் காலமும் இருந்திடும் வரமிந்த
ஏழைக்கு அவனும் தருவானே!

வாழ்திட்டநாள் அந்த மலரடி துணையால்
வருகின்ற நாளும் மன்னவன் துணை தான்
சூழும் பிறவிகள் தொலைகின்ற வரை அந்த
சோதியின் ஆதியை துணை வேண்டிடுவோம்

பாட்டு 89 அடஞ்ஞ ராகம்

பல்லவி

செந்தாமரை போன்ற சிரிப்பழகா!
செப்புவதொன்றுண்டு உன் திருவடிக்கே [செந்

அனுபல்லவி

பொல்லாத வறுமை இந்தப் புவிவாழ்வை
புரட்டி எடுக்கு முன்னே ஒழித்துவிடு அதை [செந்

சரணம்

நல்லவர்கள் நைவதும் நலம்பல கெடுவதும்
கல்லார்கள் தொகை கணக்கின்றிப் பெருகுவதும்
இல்லாமையால் என்றால் ஏதும் பொய்இல்லை இதைச்
சொல்லாமல் இருப்பதற்கும் துணிவு இல்லை சொல்லி
விட்டேன் [செந்

பாட்டு 90 பைரவி ராகம்

திருவிசார வேளை என்பர் தெரிந்தோர்கள்
அது தினமும் நடக்கும் இரவு வழிபாடு
சுந்திர மந்திர மாயன் செந்திருவை அணைத்து
ஜெகஆளும் மாண்புகளை சீர்செய்வான்]

பாலோடு பழமுண்டு பார்த்தசாரதி இப்போ
பள்ளியறை மெல்லச் செல்லும் 'பாங்கு காணீர்
மேலாடும் அணிமணிகள் மின்ன அவன் வருங் கோலம்
நூலோர்கள் நுவன்ற; நுண்மாண்பொருளோ!

கட்டியங்கள் எக்காளம் கானமே திருச்சின்னம்
முட்டி மோதிக் கொண்டு முன் நிற்கும் பக்தர் குழாம்
எட்டிப் பார்த்துத் தன்னுள் இரங்கு கின்ற ஏந்திழையார்
அத்தனைக்கும் எழிலூட்டி அருளாளன் விரைந்திடுவான்

விரைவோ வரைவோ அதுதமிழ்விளையாடும் பொன்
அரங்கோ
திரைவிலக வருமோர் தெய்வீக நாடகமோ அவன்
அருள் பெற்றோர் தன்னுள் அடைந்திடும் பூடகமோ!
யார் அறிந்தார் அவனை நானறிந்து சொல்வதற்கு!

பாட்டு 91 கவியங்கள்

மாரதர்கள் மத்தியிலே மதியொன்றே
ஆயுதமாய் மனம் கொண்டு போரிட்டு
வாகைசூடி வரும் வஸுதேவ மைந்தன்
வருக வருக வருகவே!
மாவல்லிக்கேணியின் சீர் வருக வருக வருகவே!

அவனிவாழ் அறம் பெறுக அவுணர்களின்
குலங் களைந்த தவசீலன் எழுந்தருள்கவே
ஜெய விஜயபவ ஜெய விஜயீபவ ஜய விஜயீபவ!

ஆதிமூலம் என்ற யானை காத்தவன், சோதிமணி
மார்பு துலங்க எழுகின்ருன்,
வேதமடைகி நல் வித்தையுன் விளங்கியே
நாதமாகி நால் திசையும் ஒளிகொள
ஹெச்சரீகே ஹெச்சரீகே ஹெச்சரீகே!

பாற்கடலுள் பார்கடலாய் பாம்பணையில்
படுத்திருந்து பார்புரக்கும் பேரரசு
பார்த்தசாரதிக்கு ஜே ஜே ஜே

கருங்கடலாய், கார்முகிலாய் ககனவெளிப்
பெரும் பாழாய் நிறைந்த பிரான் கரைத்தெங்கும்,
நிறைந்தபடி கருணைதனைப் பொழிந்திவான்
பொழிக பொழிக பொழிகவே!

ராஜாதி ராஜ ராஜகுல கம்பீராதிகளை
நினைப்பாலே அடக்கி நினைத்தபடி நடத்தி
நீதி நேர்மை நியாயம் நெறி விளங்க
ஓதும் கீதைப் பொருள் உலகம் தழுவி திகழ
வீர தீர கார சார சூர சூராதிகளை வீழ்த்தி
யழித்துத் தொலைத்துத் துடைத்து இச்
சகத்தைக் காப்பதற்கு இழிந்த வறுமை
கொல்வதற்கு எழுந்தான் வந்தான்
கைரவிணி நின்ருன்! பராக் பராக் பராக்!

திசை குலுங்க இடிமுழங்க நசையழிந்த
நலம் விளங்க பொடிபடபுன்மை இடிபட
இடர்கள் அடிபடதுன்பம் அகன்றிட கொடுமை
தடி கொண்டு வறுமையைச் சாடி ஒழித்திட
மாதவன் வந்தான் மாவல்லிக்கேணி
வென்று வருக வென்று வருக வென்று வருகவே!

வியாச மொழியாய் மாறன் தமிழாய்
வாசக் கருங்குழல் மங்கை ருக்மிணி
மனதில் ஒளிரும் மாமணிச்சுடராய்
அகத்தே இருத்தி அன்பைச் சாற்றும்
அடியவர் துயர்கெட அருளும் பரிவாய்
நின்ற மூர்த்தி நிமலனைப் பணிவோம்
பல்லாண்டு பல்லாண்டு பல்லாண்டே!

ஓடி உழைத்து உடலைத்தேய்ப்பவன்
தேடிய தொழிலால் செகத்தை வளர்ப்பவன்
அறிவுப் பயிருக்கு அன்பைப் பாய்ச்சியே
செழிக்கச் செய்து எங்கும் சீரைவளர்ப்பவன்
ஏழை எளியவர் எண்ணம் உறைபவன்
அன்னவன தன்னை அணிபெற வாழ்த்த
இங்கு வாருங்கள் எல்லோரும் ஒன்றாய்
வாழியரோ வாழியரோ வாழியரோ வாழி!

பாட்டு 92 ஆநந்த பைரவி ராகம் தாளமுடன் பாட்டு

கண்ணனுக்குக் கார்முகில் வண்ணனுக்கு
என்னுடைய மன்னனுக்கு ஆயிரம்
நமஸ்காரம்—அவன் மலரடிக்கு
ஆயிரம் உபசாரம்

வாசமிகு மல்லிகை வண்ணச் சாமந்தி மலர்
ரோஜா முல்லை கஸ்தூரி ஜோராகவே தொடுத்து
ராஜா நந்த முகுந்தன் நகைப் பொழியச்
சூட்டிடுவேன்

பன்னீர் அத்தர் பெய்த பசுஞ்சாந்தைக்
குழைத்து மின்னும் பொன்தூண் போன்ற
மேனியெங்கும் தடவி கன்னுலே வீசி
அவன் களைப்பாற்றுவேன்

இன்ன நறுங்கனியும் தேனீந்த நறும்
பாலும், உன்ன உன்ன வெண்ணெயும்
கொண்டுத் தருவேன், உலகமுண்ட திரு
வாயில் ஊட்டிவிடுவேன்

மண்ணளந்த மலர்க்கரம் பற்றி அன்பாய்
விண்ணளந்த சேவடியை வருடிடுவேன்
விண்ணளந்த கோமகனின் மேனியழகை
மெய்யழியக் கண்டு உவந்து மகிழ்ந்திருப்பேன்

பாட்டு 93 நீலாம்புரி ராகத் தொகையறு

வனப்பென்ன வனப்படியோ வாய்த்த எழிற் கொண்டையடி
மாதவனின் பேரழகை என்ன சொல்லி மகிழுதம்மா!
மடியமர்த்தி அன்னவனின் மதுரச்சிறு சொல்கேட்ட
மாதவத்தாள் யசோதையின் தவமென்ன கூறடியோ

தாள இசையமைத்து தண்டமிழில் சொல் எடுத்து
தாலாட்டுப் பாடிடுவேன் தாமோதரா
நீலக்கருவிழியின் நேர்த்தியிலே மாய்ந்த நெஞ்சம்
மாலவனை விட்டகல மறுக்குதம்மா என் செய்வேன்

பாட்டு 94 நீலாம்புரி ராகம்

### பல்லவி

காலமெல்லாம் பாற்கடலுள் கரைந்து இருந்து ஒன்றானால்
காலழகு காணும் உயர்சீர் பெறுவேன் (கால)

### அனுபல்லவி

நீலவான தேர்த்தியிலே நேராகக் கலந்து விட்டால் அந்த
கோல மேனி எழிலுடனே கூடிடுவேன் (கால)

### சரணம்

கண்ணன் என்ன எண்ணுவானோ கைரவிணி கொள்ளுவானோ
என் நிலைக்கு இரங்கியே ஏற்றருள்வானோ ஏடிபெண்ணே
என்றழைத்து
என்னில் நீயும் கலந்து விட்டாய் என்று சொல்லானோ!

பாட்டு 95 இராக மாளிகை தாளமுடன் பாட்டு

### சாரங்கா ராகம்

### பல்லவி

திருவல்லிக்கேணிக்கு ஒரு முறை போய் நீ
சேதி மிகச் சொல்லிவாடி கிளியே (திரு)

### அனுபல்லவி

கடல் தழுவும் கரையோரம் என்னைக் கனக
மணிச் சிலையாக்கி இந்த
உடல் தழுவி அவன் செய்த உல்லாசங்களை சொல்லி (திரு)

### சரணம்

பொன்னே மணியே புதுப் பூவையே என்று எந்தன்
மின்னூர்ந்த இடை தழுவி மெல்ல நடந்தானடி
கண்ணே உனை அன்றி வேறு கருதேன் என்று அந்தக்
கள்வன் அன்று சொன்னதெல்லாம் கதையோ
என்றறிய (திரு)

ரஞ்சனி ராகம்

படம் போல நிற்கின்ற பாவையே என்று எந்தன்
திடமான நெஞ்சையொரு சிரிப்பில் அழித்தானடி
புடம் போட்ட தங்கமடி பொலிவே வா என்றிழுத்து
அடம் போட்டவன் செய்ததெல்லாம் ஐய சொல்ல
வெட்கமடி [திரு

சாமா ராகம்

இப்படியும் உண்டோடி இந்த ஊர் உலகந்தன்னில்
தப்படியோ ஆண்களிடம் சகவாசம் கொள்வதெல்லாம்
எப்படியோ எனையிழுத்துத் தன் இளமார்பில் புதைத்துக் கொண்டு
செப்பிடு வித்தைகள் செய்தான் சீங்குழலில் மயக்கிவிட்டான் [திரு

பூபாள ராகம்

பாண்டவ சகாயனுக்கு பார்த்தனுடை சாரதிக்கு நான்
வேண்டி தொழுதுருகும் வேதனைச் சேதி சொல்லு அவன்
தீண்டி முகர்ந்த இந்தச் சிந்தை அனலாகுமுன்னே
மீண்டுமோர் முறைவந்து மெய்தழுவச் சொல்லடியோ! [திரு

பாட்டு 96 காபிராகம் தாளமுடன் பாட்டு

பல்லவி

வைகையிலே நீராடி வந்தபூந்தென்றல்
மலர்க் காட்டில் உறவாடி வந்ததொரு சுகமோ [வைகை

அனுபல்லவி

செங்கரும்புக் காட்டினிலே தேன் பெய்தது ஒப்ப
சிந்தைதனை குளிர்விக்கும் சீரில் ஒரு சீரோ!

சரணம்

தென்னன் மணி மண்டபத்தில் தேர்ந்த தமிழ் முகிழ்வை
திருவல்லிக்கேணியிலே கண்டதொரு பேறோ
மங்கை மன்னன் தொழுத அந்த மாணெழில் பிழம்பு
வரையாத ஓவியமாய் மனத்தமர்ந்த இன்பம்! [வைகை

பாட்டு 97 இராகமாலிகை உசேனி

கைரவிணி ஓரத்திலே கனிகள் கொஞ்சும் தோட்டத்திலே
கண்ணன் மணி வண்ணன் வந்தான் குழலிசைத்தான்
கன்னி எந்தன் இளமனதை அதில் இழைத்தான்

நாதமென்ன நாதமடி நால்திசையும் அமுதமடி அவன்
பாதத்தில் பலியும் பசுவும் படுத்துருண்ட விந்தையடி
வேதமோதிய வாயும் வெண்ணை அள்ளும் விரலும்
வேயோடு வேய்ந்திசையில் மேதினியை காத்ததடி

பிருந்தாவன சாரங்கா

சிதகிவிட்டான் இசைமணிகளை சிந்தையிலே கோர்த்துவிட்டான்
பதற விட்டான் பாவிஎனை பார்க்கவிட்டான் கட்டழகை
கானமென்ன கானமடி கரைக்கும் உயிர் கானமடி
பானமென்ன பானமடி ஜீவப்பயிர் துளிர்க்கும் பானமடி

இசையூடு விசையாக விளையாடும் கொல்குருளை
எழிலை நான் எழுதிடவே வில்லிபுத்தூர் பிறக்கலையே
அசையாதிருந்தவள் நான் அவனடியில் வீழ்ந்து விட்டேன்
சட்டென்று எனை எடுத்தான் தாமோதரன் தளிர்கரத்தால்

காபி ராகம்

என்னடி உன் அன்பென்றான் ஏற்றவள்தான் நீ என்றான்
இதயம் சில் என்ன இணையடியில் இனும் விழ்ந்தேன்
எடுதனைத்து முகம்பார்த்து இன்பத்திலே மிதக்கவிட்டான்
தொடுத்ததுழாப் மாலையெனத் தோளிரண்டில் சூடிக்
கொண்டான்

கையிரண்டில் எனை அள்ளி கண்சிமிட்டி பார்த்துரைப்பான்
கனகமணிச் சரமே! கற்பூர பெட்டகமே! விளையாட!
நானுருட்டும் வெண்ணை நிறைகுடமே! வென்றனையே
பக்தியினால்
வேண்டும் வரங்கேள் என்றான் விழிஇரண்டில் கனிவோழுக!

பூபாளம்

பிரியா வரம் எண்ணி பேரன்பைத்தான் எண்ணி
பின்னும் பல எண்ணி பேதலித்த என் நெஞ்சு
...ன்னும் என்ன் கேட்க என்று ஏங்கித் தவிக்கையிலே
முன்னவனைக் காணவில்லை வளைத்து நின்ற எழில் இல்லை

வாசுதேவ மைந்தனவன் மறைந்தது எங்கு அம்மா!
வாராது வந்தணைந்த மாநிதியம் போனதெங்கே!
கைமுதல் போல் வந்த கண்ணனவன் எங்கு சென்றான்
சொல்லிடுவோர் மலர்த்தாளை சூடிடுவேன் சென்னியிலே!

பாட்டு 98 நாட்டைக்குறிஞ்சி இராகம் ஆதி தாளம்

பல்லவி

குற்றாலச் சாரலிலே குறிஞ்சி மலர்பூக்க அதைக்
கொண்டு வந்தேன் சாரதியின் பொன்னடிக்கு (குற்)

அனுபல்லவி

பொருணை பொலி மாறன் பூந்தமிழ்ப் பொருளெடுத்து
புனைந்தேன் இசைமாலை பூமகள் கேள்வனுக்கு (குற்)

சரணங்கள்

வீணை கையிலேந்தி வேளைதனை நோக்கி
கானம் கூட்டி வந்தேன் கரும்பாக
சேனைத் திரளிடையே செழுமறை புவிக்கீந்த
சீலன் அதையேற்றால் சேருமே பாக்யமே (குற்)

அன்புக்கனி பிழிந்து ஆவம் இனிப்பூட்ட
இன்பக் கிண்ணமதில் எடுத்து வந்தேன்
மன்னன் கைரவிணி வள்ளல் இதை வாங்கி
மகிழ்ந்து புஜித்து விட்டால், மறு பிறவி இல்லை (குற்)

பாட்டு 99 இராகமாலிகை அடாணா ராகம்

பல்லவி

மத்த மதப் பெரும் யானையைப்போல் எந்தன்
மன்னவன் தெருவினில் வந்தானடி [மத்]

அனுபல்லவி

தத்துவம் ஆயிரம் தந்த சதுர் மறை
தான் முழங்கிடவே சென்றானடி [மத்]

### சரணம்

பெற்றவர் கண்டிட்டால் திருஷ்டி வரும் என்பார்
பீடு நடையின் ஒய்யாரத்திற்கே
திக்திக்கும் என் நெஞ்சு திரும்பத் திரும்பவே
தேடுதடி அந்தச் சீரடியை [மத்]

### தன்யாசி ராகம்

திருவல்லிக்கேணியில் வாழ்ந்திட நாமெல்லாம்
செய்ததவமது போதுமோடி
அருமைமிகும் அவன் கோலமதைக் காண
ஆற்றிய நோன்புகள் ஏதடியோ!

பாரதம் செய்திட்ட சாரதி மார்பினில்
பளிச்சிடும் நகை எனை நகைக்குதடி
பாரடி பாவையே பாக்கியம் என்போலுன்
பக்கம் வருமோ சொல் என்குதடி [மத்]

### இந்தோள ராகம்

சொல்லடி நீயும் தான் சொக்கி நின்றனை
சுந்திரத் திருவிழி ஜாலத்திலே
தள்ளுமோடி எந்தத் தாமதவேளையும்
தயவு செய்து அவன் பாற் சேர்த்திடடி!

அன்னை அத்தன் அவன் ஆழ்ந்தசுற்றமவன்
ஆண்டிடும் கோமகன் அவனேயடி
விஸ்வரூபனாவி என்நெஞ்சம் விரியுது
வித்தகனைக் கொள்ளும் ஆசையினால் [மத்]

### சுருட்டி ராகம்

ஏனிந்த நகைப்பு ஏளனமோ சொல்
என்னிலே உனக்கும் வாராதோடி
பேணிய உழைப்பு பெற்ற பலன் போல
பெற்றேனே கைரவிணியானை

பூணணி மார்பினன் பொன்னவிர் நகைசிந்தி
போகும் போக்கில் எந்தப்பூவையர் நிலை நின்றார்
வேணுவிலோலன் விமலன் கமலனவன்
தானும் காணும் நற்பேறளித்தான் [மத்]

பாட்டு 100

தொழுகை மெட்டு

அன்பருக்கு அன்பனே ஆயர்குலத்திலகனே
நண்பருக்கு நண்பனே நந்தகோபன் மைந்தனே
விண்ணவர் தம் முதல்வனே வேத கீத வித்தகா
கீதைதந்த மேதையே கீர்த்தி உனக்காகவே

கண்ணனே கடல்வண்ணனே காதலிற் போர் மன்னனே
அண்ணனே உமை அண்ணனே எனை ஆதரிக்க வேணுமே
எண்ணமே உமது எண்ணமே இரவுபகலும் சொன்னமே
பண்ணுமே அருள் பண்ணுமே பார்த்தனுக்கு சாரதே

கிண்ண வெண்ணெ தின்னு தீர்த்த சின்னஞ்சிறு கண்ணா
மண்ணளந்து உண்ட வாயால் (எனை) வாழ்க என்று கூறு
பண்ணமுதச் சொற்கேட்க விண்ணவரும் விரைகுரார்
எண்ணரிய செல்வமே என் இதயத்துள்ளே ஓடிடு.

தண்ணீர் போன்ற நிறமுனக்கு தந்ததுயாரு மேகமா
உன்னி உன்னி பார்க்கிறேன் உணரக்கூடவில்லையே
வண்ணக் குழல் எடுத்தூது வடிவழகிய நம்பி
சின்னக்காலில் சேவிக்கின்றேன் சேர்த்துக் கொள்வாய் கண்ணா

பாட்டு 101

குறிஞ்சிப்பண்

தங்கமலராய்த் தெறிக்கும் தாமரையாள செல்வன்
சிங்கமென வீற்றிருக்கும் ஓடமதை விடுவோம்
ஐலசா ஐலசா ஆதிநாதருக்கு ஐலசா

கைரவிணிக் கரைதனிலே கவியும் வெண்ணிலவு
கவிபாட இசைவாக நடைபயிலும் ஓடம்
ஐலசா ஐலசா ஆழ்வார்க்கு ஐலசா

மாமறையைச் சாமார்மாய வண்டமிழாள் வீச
தேமறையைத் தந்தவனே செலுத்தினான் ஓடம்
ஐலசா ஐலசா அல்லிக்கேணிக்கு ஐலசா

மீனனும் கண்ணனின் மேனியழில் வீழ்ந்த, மீனவன்
(தன்) ஓடமதை வித்தையுடன் விட்டான்
ஐலசா ஐலசா அச்சுதற்கு ஐலசா

பாட்டு 102 கரகரப் பிரியா ராகம்

பல்லவி

கொஞ்சுது தென்றல் குலவுது எண்ணம்
வஞ்சியே நீ போய் வாடி மாவல்லிக்கேணி நாடி ]கொஞ்

அநுபல்லவி

செந்தாமரைக் கண்ணன் தேவகிதிருமைந்தன்
மந்தாரச் செடியோரம் வாக்களித்ததைச் சொல்லி [கொஞ்

சரணம்

பூந்துழாய் மாலை மார்பன் பொன்னடி எண்ணியெண்ணி
பூரித்தும் புளகித்தும் பொங்கியே விம்மும் நெஞ்சம்
வேந்தனைக் காணாததால் வேகுதே வேதனையால்
விரைந்துமே வரச் செல்லுவிண்ணவர் கோமகனை [கொஞ்

பாட்டு 103 நீலாம்பரி ராகம் ஊஞ்சல்

மகிழம்பூத் தாரானின் தமிழ்மாலைகளே கயிறாய்
மங்கை மன்னன் மதுரத்தமிழ் வண்ணமே மணையாய்
விந்தைமிகு ஊஞ்சலுக்கு மேல் கட்டும் பட்டாய்
வில்லிபுத்தூராரின்தமிழ் விரைந்துவந்ததம்மா [லாலிசுபலாலி

ஞாலமதை ஊஞ்சலிலே நாளுமிட்டு ஆட்டும்
ஞானமேனி தீபனுக்கு நாமுமிட்டோம் ஊஞ்சல்
காலமதை வெல்லுகின்ற கைரவிணிய பேராளர்
நாளுமொரு ஊஞ்சலிட்டு நன்றாகப் பாடிடுவார்
[லாலிசுபலாலி

பாட்டு 104 குறிஞ்சி ராகம்

வண்ணமணி மாடம் நிலவு வந்து விளையாடும்
கன்னலெனும் போழ்திலந்த மகள் கரைந்தாள்
காலமதைத் துணைக்கழைத்து மனமகிழ்ந்தாள்!

நாராய் நீ திறிந்து நால் திசையும் போய் வருகையிலே
நாரணனைக் கண்டதுண்டா சொல் என்றாள்!

சொல்வாய் கிளிப்பிள்ளாய் சோர்ந்தயர்ந்தேன் பாராயோ
செல்வாயே எனக்காக திருவல்லிக்கேணிக்கு

சோரம் செய்து பெண்களை சுகமாக அணைத்தாலும்
மாரனிடம் போய் சொல்லுவாய் மடக்குயிலே
மறவர்குலப் பெண் நானென்று

வாராய் செம்போத்தே! மாவல்லிக்கேணி சென்று
நீராய் ஊருகும் எந்தன் நிலைகூற மாட்டாயோ!

கிழக்குக் கரையோரம் கின்னரமாய்ப் போகும்
செவ்வானப் புட்களே நீர் செய்தி சொல்லல் ஆகாதோ

செய்தி நலங்கொண்டுவர தினைமாவும் தேனும் நான்
இப்போழ்தே நந்திடுவேன் அந்த இடையனிடம் செல்லும்

வெளியே வா இங்கு மாறிடு புயலாக
கைரவிணிக் கரையைக் காட்டி நில்லு
அன்னை அத்தன் உண்டு என்றால் அவரிடம் போய்
அவனின் அழும்புகளைச் சொல்லியே அறம் கேட்போம்!

## பாட்டு 105 நலுங்கு சங்கராபரண ராகம்

நானறிவேன் நாரணனை நாளும்எனை மறவார் அந்தப்
பூரணனைப் போற்றியொரு பொன்னான நலுங்கிடுவோம்

தோழியரே வந்து சூழ்திடுவீர் இங்கு
ஆழியான் அடிபற்றி நலுங்கிடவே
வாழிய என்று அவன் மரபின் உயர்வைச் சொல்லி
மஞ்சளுடன் குங்குமமும் வைத்து இடுவீர்!

செம்பஞ்சுக் குழம்பொடு சிந்தூரப் பொடி சேர்த்து
தேவகி மைந்தனின் திருவடிக்கு பூசிடுவோம்
ம்ங்களமும் மகிழ்வும் மருவி வரும் அழகாக, அவன்
மலரடிக்கு இன்னும கொஞ்சம் எழிலூட்டுவோம்

நலுங்கிடுவோம் நாரணர்க்கு நாள்மலராம் சேவடிக்கு
பா மலரால் பூஜித்து பணிந்து இடுவோம் நலுங்கம்மா!

## பாட்டு 106

புளியம்பழம் போல பொல பொலென உதிருகின்ற
பொல்லாப் பிறவிகளில் புகுந்து இளைத்து, வந்தேன்
அளியத்தாய் நீ என்னை ஆண்டிட வேண்டுமென்று
கனியொத்த தமிழினிலே கவிபடைத்தேன் சுவையாக

சுடுமணலாய் விரிந்தெங்கும் தொல்லை தந்தபுலி வாழ்வு
எனக்கு மட்டுமில்லை அப்பா, எல்லோரும் வேம்பு என்றார்
வேம்பைக் கரும்பாக்கும் வித்தகனே உன்னுடைய
விரிமலர் தாளணைந்தேன்! விடுதலை தாரும் ஐயா

பெரியோர்கள் தமைப்பற்றி பெருமையுடன் பாடிவந்த
என் தமிழை இன் தமிழாய் ஏற்று அருள் புரிந்திடுக
கைரவிணியானே புலி காப்பவனே என் அருந்தாய்
ருக்மிணி நாயகனே ஒரு பக்குவத்தில் எனை ஆழ்த்து!

பாட்டு 107 மத்தியமாவதி இராகம்

பல்லவி

திருவல்லிக்கேணி வாழும் ஐயன்
நாடிவரும் அன்பர் துயர்தீர்க்கும் அருட்கையன் மெய்யன்
[திரு

அநுபல்லவி

கோடி சூர்ய பிரகாசவதனன் எங்கும்
தேடித் தேடி அலைந்தாலும் கிடைக்காத சேவையாளன் [திரு

சரணம்

பார்த்த சாரதே பணிந்தேன் நின்னடி, வேறு
பரிவில்லை எனக்கென மனப்பக்குவம் கொண்டவர்க்கு வெறும்
வார்த்தையாலும் சொல்லமுடியாதவன் கருணை அமுதை
வாரி வாரி வழங்கி வள்ளன்மையோடு
ஆட்கொள்ளும் திருவல்லிக்கேணி வாழும் ஐயன்

பாட்டு 108 மங்களம் ஸ்ரீராகம் சவுக்ககாலநடை

வாடி தோழி வாணி உமையே
மங்களம் சொல்லடி முதலாக

கூடி செந்திரு குலவிடும் மார்பனுக்கு
தேடி தேவர்கள் தினம் வரும் வாசனுக்கு [வாடிதோழி

ஆயிரம் நாமத்தில் அகழ்ந்துள்ள கருணையை
சாரதி எனத்தரும் தன்மைக்கு மங்களம் [வாடிதோழி

நான்மறைப் பொருளை ஓர் மறையாய் தந்த
நலத்திற்கு மங்களம் தலத்திற்கு மங்களம [வாடிதோழி

மணவாள மாமுனிவன் மாண்புக்கும் குணத்திற்கும்
பூதூர் வள்ளலின் புகழுக்கும் மங்களம்!

